# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி வைகாசி 1 - மே 14, 1972



''கல்கி''யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

கல்கி

மலர் 31

இதழ் 42



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# பிரேக் இல்லாத மோட்டார் வண்டி

நமது மூல அரசியல் சாஸனத்தைக் காக்க வேண்டியதன் அவசியத்தை நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வருகிறேன். இதற்குக் காரணம் சாஸனம் கீழ்க்கண்ட வாக்குப் பிரமாணங்களைத் தந்திருப்பதே யாகும்:

முதலாவதாக, சிறுபான்மை மதங்களைச் சேர்ந்த சமூதாயங்கள், தத்தம் மதங்களைப் பின்பற்றப் பூரணமான காப்புப் பெற்றிருப்பது. பெரும்பான்மையினர் பெற்றுள்ள உலகியல் உரிமைகளையும் சலுகைகளையும் சற்றும் ஏற்றத் தாழ்வின்றிச் சிறுபான்மையினருக்கும் அளித்திருப்பது.

இரண்டாவதாக, பிதுரார்ஜிதமாகவோ, அல்லது சட்டத்துக்கு விரோதமில்லாத வேறு விதங்களிலோ மக்கள் பெற்றுள்ள சொத்துக்களை அவர்கள் சுதந்திரமாக அநுபவிப்பதற்குக் காப்புத் தந்திருப்பது. இந்தச் சொத்துக்களில் எதையேனும் அரசாங்கம் ஆர்ஜிதம் செய்ய விரும்பினால் அதற்குப் போதுமான, நியாயமான நஷ்டஈட்டுத் தொகை தர வேண்டும் என்று சாஸனத்தில் உத்தரவாதம் தந்திருப்பது.

மூன்றுவதாக, இவ்வித ஆர்ஜிதத்துக்குத் தேவை உண்டா என்பதையும், நஷ்டஈடு போதுமானதுதானா என்பதையும் நீதிமன்றங்கள் விசாரிப்பதற்கு இடமளித்து, அவற்றின் தீர்ப்பை முற்றிலும் மதிக்க வேண்டும் என்று விதித்திருப்பது.

அரசியல் சாஸனத்தில் பொறிக்கப்பட்டுள்ள மேற்சொன்ன வாக்குப் பிரமாணங்கள்தாம் மக்களைச் சர்வாதிகாரத்திலிருந்தும் அடிமை வாழ்விலிருந்தும் காப்பாற்றுகின்றன.

இந்த இனங்களில் சாஸனம் தகர்க்கப்படாமல் அதனைக் காக்கும் பணியைப் புரிவதற்கென்றே ஓர் அரசியல் கட்சி அவசியம் இருந்தாக வேண்டும். சாஸனம் தரும் வாக்குப் பிரமாணங்களை எந்நாளும் காப்பதாக அது பிரதிக்ஞை கொண்டிருக்க வேண்டும். ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதை அக்கட்சி தன் முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். நல்லாட்சி நடத்துவதை நோக்கமாகக் கொண்டு பார்லிமெண்டும் தலைவர்களும் இருப்பது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் சாஸன வாக்குறுதிகளைக் காப்பதற்கென ஒரு கட்சி இருக்க வேண்டியதும். இக்கட்சி நீதிமன்றங்களின் சுதந்திரத்தில், குறிப்பாக ஸுப்ரீம் கோர்ட்டின் அதிகாரத்தில், நேரடியாகவோ மறைமுகமாகவோ தலையிடுவதில்லை என்று உறுதி பூண்டிருக்க வேண்டும். இவையே நல்லாட்சிக்கும் ஜனநாயகத்துக்கும் அடிப்படைத் தேவைகளாகும். இவற்றை மக்களுக்குத் தெளிவாக எடுத்துச் சொல்லி விளக்க வேண்டும். சாஸனத்தைத் தகர்ப்பதற்கு மக்கள் ஒப்புதல் தருமாறு இன்று அவர்களுக்குத் தவறான வழி காட்டப்படுகிறது. இதன் அபாயத்தை மக்களுக்கு விளக்கி எச்சரிக்க வேண்டும்.

கட்சி நலன்களைப் புகுத்தித் தலையிடு செய்யாமல் உண்மையான பொருளாதாரச் சீர்திருத்தங்களை மேற்கொண்டால், சமூகம் அனைத்துக்கும் சமநீதி கிடைக்கச் செய்வது இயலாத காரியமல்ல. அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கை இதற்கு உற்ற வகையிலேயே வகுக்கப்பட வேண்டும். அதோடு ஒழுக்க நெறிகளைக் காக்கவும், வளர்க்கவும் நடவடிக்கை எடுக்க வேண்டும். நல்லாட்சியின் அஸ்திவாரமே தூய பொருளாதாரக் கொள்கை, ஒழுக்கத்தின் வளர்ச்சி இவற்றில்தான் உள்ளது. தலைமையில் உள்ள ஆடவர், பெண்கள் யாவரும் நடத்தையிலும் தகுதியிலும் மிக உயர்ந்தவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் மக்களுக்கு முன்னின்று வழிகாட்டுபவர்களாக இருக்க வேண்டுமேயன்றி, மக்கள் காட்டும் வழியில் சென்று வோட்டுப் 'பிடிப்பவர்களாக இருக்கலாகாது. வோட்டுப் பெற்றதால் மக்களின் மீது ஆளுகையும் அதிகாரமும் பெறுகிறவர்கள் இந்தச் சக்தியை நாட்டின் நீண்ட கால நலனுக்காகத்தான் பயன்படுத்த வேண்டும்.

இவ்விஷயங்களில் விசேஷ ஈடுபாடு கொண்டு, சாஸனத்தையும் மக்களின் உரிமைகளையும் காப்பதற்கென ஒரு கணிசமான மக்கள் தொகை இருக்க

அரசியல் 'தலைவர்'களை அருகில் சேர்க்கக் கூடாது. ஆகாரத்தில் இன்னும் நாட்டுப் பற்று அதிகம் சேரவேண்டும்.

வேண்டியது நாட்டுக்கு அத்தியாவசியம். பிரதமரும் ராஷ்டிரபதியும் எப்படிப் பட்ட அவசியத் தேவையோ, அப்படிப் பட்ட அவசியத் தேவை இத்தகைய மக்கட் குழாம். இது போன்றதொரு கட்சி இல்லாவிடில் நாட்டின் அரசியலானது பிரேக்கில்லாத மோட்டார் வண்டி போலவேயாகும்! மோட்டார் வண்டி எத்தனை அழகாக இருந்தாலும் பிரேக் இல்லாவிடில் என்னவாகும்?

ஆட்சி ஸ்தானத்தைக் கைப்பற்றும் அளவுக்கு வோட்டுக்கள் பெறக்கூடிய கட்சியே உயிர் வாழ நியாயமுண்டு எனவும், இல்லாவிடில் ஒரு கட்சியைக் கலைத்துவிட வேண்டும் எனவும் எண்ணுவது அடியோடு தப்பாகும். அரசாங்கத்தில் உள்ளவர்கள் அந்தந்தக் காலத்துக்கு ஏற்ற தேவைகளை அநுசரித்து ஆட்சி நடத்துவார்கள். இவர்களை விட, ஜனநாயகம் என்பதன் இதய சாரத்தையே காக்கத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்தான் தேசத்துக்கு அதிக முக்கியம் வாய்ந்தவர் ஆவர். அரசியல் என்பது ஆட்சியதிகாரத்தைப் பெறுவதற்காகப் பல கோஷ்டிகள் போட்டி போடுவதே என்று எண்ணலாகாது.

சுதந்திரக் கட்சியை நிறுவிய போது, மக்களின் உரிமைகளைக் காக்கும் பணி அதன் ஆதாரக் கொள்கைகளாக வகுக்கப்பட்டது. நாட்டின் நன் மக்கள் அனைவரும் சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கொள்கைகளைப் பன்முறை படித்து, அவ்வளவாக விஷயஞானமில்லாத மக்களுக்கு அவற்றை விளக்க வேண்டும்.

அந்நிய ஆக்கிரமிப்பை எதிர்த்து ராணுவ ரீதியில் செய்கிற பாதுகாப்புக்கு உள்ள முக்கியத்துவம் சாஸனப் பாதுகாப்புக்கும் உண்டு. அந்நிய ஆக்கிரமிப்பாளர்களுக்கு உதவி செய்வது தேசத் துரோகம் எனில், ஜனநாயகத்தின் இடத்தில் சர்வாதிகாரத்தை அமர்த்துவதற்கு உதவி செய்வதும் தேசத் துரோகமேயாகும். ராணுவத்தைக் கொண்டு அந்நிய ஆக்கிரமிப்பை எதிர்த்து நாட்டைப் பாதுகாக்கும் நாம், நம்மவர்களே சர்வாதிகாரிகளாகி ஏகாதிபத்தியம் நடத்த அநுமதிப்போமாயின், நாம் பெற்ற சுதந்திரம் அரிசியை விட்டுத் தவிட்டை மட்டும் வைத்துக்கொண்டதாகும். ஆட்சி பீடத்தைப் பெற்றிருப்பவர்களின் தவறான நடவடிக்கைகளைத் தடுக்க மக்களுக்கு எந்த உரிமையும் இல்லாமல் செய்வது ஏகாதிபத்தியமே. ஏகாதிபத்தியம் ஏற்படாதிருக்கவே சாஸனத்தில் அடிப்படை உரிமைகள் பொறிக்கப்பட்டன. 'அதிகாரத்தில் உள்ளவர்களின் மதி கெட்டுப் போகும்; பூரண அதிகாரம் பெற்றவர்களின் மதி பூரணமாகக் கெட்டுப் போகும்' என்று சாஸனகர்த்தர்கள் தீர்க்க தரிசனத்துடன் உணர்ந்தே மக்களின் அடிப்படை உரிமைகளை வகுத்துத் தந்தனர்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

பாரதப் பிரதிநிதி ஸ்ரீ தார் பாகிஸ்தான் பிரதிநிதிகளுடன் நடத்திய பேச்சுவார்த்தைகளின்போது எந்தெந்த அம்சங்களில் உடன்பாடு கண்டார் என்று குறிப்பாகத் தெரியாவிடினும், நமது பிரதிநிதி மிகுந்த நம்பிக்கையுடன் திரும்பியிருப்பதைத் தெளிவாகக் காண்கிறோம். ஸ்ரீ தார் திறமை வாய்ந்த அதிகாரி. இரு நாட்டுத் தலைவர்களின் உச்ச கட்டச் சந்திப்பு குறித்து அவர் நம்பிக்கை கொண்டிருப்பதற்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு.

இவ்விஷயத்தில் சிக்கல் உண்டாக்கும் அம்சங்கள் அமெரிக்கக் கொள்கையும், சீனம் பாகிஸ்தானுக்குத் தரும் ஆதரவுமேயாகும்.

இந்தத் தடைகளைக் கடப்பது கடினம்; எனினும், இயலாத காரியம் அல்ல. இந்தியாவும் பாகிஸ்தானும் சமாதானமாக வாழ்வதன் நிரந்தர நலனை இரு தரப்பினரும் உணர்ந்து, இத்திசையில் தம்மால் இயன்ற அனைத்தையும் செய்வர் என்று எதிர் பார்ப்போம்.

விசாலமான அடிப்படையில் பூரணத் தீர்வு காண வேண்டியதன் அவசியமும் அவசரமும் முதன் முறையாக உணரப்பட்டுள்ளன. இல்லாவிடில் இரு நாடுகளும் பொருளாதாரத்தில் திவாலா நிலை அடைய வேண்டியதுதான்.

காச்மீர விஷயம் ஒரு பெரிய தடையாக இருக்கும். காச்மீரத்தில் பொதுஜன வாக்கெடுப்பு நடத்த வேண்டும் என்கிற சவாலை ஏற்கிற துணிவும் நம்பிக்கையும் நமக்கு இப்போது தேவையாகும். நிகழ்காலப் போக்குகளைப் பார்த்த பின்னர் காச்மீர மக்கள் பாகிஸ்தானோடு சேரவேண்டும் என்று வாக்குப் போடுவார்கள் என்று பகுத்தறிவு படைத்த எவரும் அஞ்சுவதற்கிடமில்லை. நிலச் சொந்தக்காரர்கள் வயலைக் கட்டிக் காப்பதுபோல் அல்ல இவ்விஷயம். நாம் ராணுவ உதவி கொண்டு மட்டும் செயல்படுவதற்கில்லை. அங்குள்ள மக்களைக் கவர்ந்து நம் பிடிப்பில் வைத்துக் கொள்ள வேண்டும்.

★

தேர்தல் வேட்பாளர்களின் செலவுகளைக் குறைப்பதற்கும், தேர்தல் வெற்றிக்குப் பண பலத்தைச் சார்ந்திருப்பதைத் தவிர்ப்பதற்கும் யோசனைகள் உருவாக்கப்படும் என்று திரு ஸி. சுப்பிரமணியம் தஞ்சாவூரில் பேசியிருக்கிறார். வாஸ்தவத்திலேயே இவ்விதமான திட்டம் பரிசீலனையில் இருந்து, அந்த அடிப்படையில் அவர் பேசியிருப்பாராயில், இது நல்ல சேதியாகும்.

★

பல்வேறு ராஜ்யங்களிலும் உள்ள 'சோஷலிஸ்ட்' எனப்பட்டவர்களின் மனத்தில் இப்போது நில உச்சவரம்புக் கொள்கை அதிவேகமாகக் கிளம்பியிருக்கிறது. இப்போது மைசூர் ராஜ்யத்தில் ஒரு குடும்பத்துக்குப் பத்து ஏக்கர் வரம்பு விதிக்கப்பட்டால், அக்குடும்பத்தில் ஆறு குழந்தைகள் இருப்பின் அடுத்த சில ஆண்டுகளில் தலா ஒன்றேமுக்கால் ஏக்கருக்கும் குறைவாகவே பெறுவர். தங்கள் தந்தையாரின் நிலத்தில் பத்து ஏக்கருக்கு மேற்பட்டதை அரசாங்கமானது தன் இஷ்டப்படி பயன் செய்வதற்காக எடுத்துக்கொண்டு, தங்களுக்கு நியாயமான நஷ்டஈடு தராமல், இவ்விஷயத்தை நீதிமன்ற விசாரணைக்கும் அப்பாற்பட்டதாக்கும் போது, அந்த வாரிசுகளின் கதி என்ன? இந்த உச்சவரம்புத் திட்டம் எனக்குச் சிறிதும் புரியவில்லை.

★

சர்வ தேசத் தொடர்புகளை இரகசியமாகவே வைத்திருப்பது முந்தைய வழக்கம். இதனை அமெரிக்கா மாற்றியதைப் பெரிய அபிவிருத்தியாக உலகம் கருதியது. அமெரிக்க சர்க்கார் மற்ற நாடுகளுடன் கொண்டிருந்த தொடர்புகளில் எவ்வித ஒளிவு மறைவும் இல்லாமல் இருந்ததற்காகப் பாராட்டுப் பெற்றது. துரதிருஷ்டவசமாக சர்வதேசத் தொடர்புகளில் அமெரிக்கா பழைய இரகசியக் கொள்கைக்கு இப்போது திரும்பி விட்டது!

★

தொழிற் சங்கங்களில் அரசியல் கட்சி நோக்கங்களுக்காகத் தலையீடு செய்வதைத் திரு நெடுஞ்செழியன் கண்டித்துப் பேசியிருப்பதைப் படிக்க மகிழ்ச்சியாக உள்ளது. அரசியல் நோக்கத்துக்காகத் தொழிற்சங்கங்களைப் பயன்படுத்திக் கொள்கிற எண்ணம் தி. மு. க.வுக்கு இல்லை என்று அவர் கூறியதாக வெளியாகியிருக்கிறது. இந்தக் கூற்று அழகிய வார்த்தைகளாக மட்டும் நின்று விடாமல், காரியத்திலும் மனப்பூர்வமாகப் பின்பற்றப்படும் என நம்புகிறேன்.

## ஆதிசங்கரர் லட்சார்ச்சனை

வைகாசி சுக்ல பஞ்சமி வையம் முழுவதற்கும் வைபவ தினம். ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் அவதரித்த புண்ணிய நாள் அது. இவ்வருடம் மே 17ந் தேதி ஸ்ரீ சங்கர ஜயந்தி நிகழ்கிறது. தேசமெங்கிலும் மகாபுருஷருக்கு மகோத்ஸவம் எடுக்கப்படுகிறது. இவற்றுள் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது காஞ்சிபுரத்தில் ஸ்ரீகாமாக்ஷியம்பிகையின் ஆலயத்தில் நடக்கும் ஜயந்தி உத்ஸவமாகும். ஸ்ரீ ஆதி சங்கரர் காமாக்ஷி தேவியின் அபரிமித ஆற்றலை மக்கள் தாங்குமளவுக்குக் கட்டுப் படுத்தியதும், அவளது காமகோடி பீடத்தின் பெயரில் காஞ்சியிலேயே தமது ஸ்ரீ மடத்தை நிலைநாட்டியதும், கடைசியில் காஞ்சியிலேயே விதேக கைவல்யம் எய்தியதும் பக்தர்கள் அறிவார்கள். காஞ்சி காமாக்ஷி ஆலயத்திலுள்ள ஆசாரியர்களின் சந்நிதி விசேஷம் படைத்தது. மே 13ந் தேதி முதல் 28ந் தேதி வரை இந்த ஆசாரிய மூர்த்தத்துக்கு லக்ஷார்ச்சனை நடத்தப்படுகிறது. இதில் எஞ்சும் தொகையைக் கொண்டு மேற்படி சந்நிதிக்கு மணிக் கதவும், அம்பிகைக்கு மரத் தெப்பமும் செய்து வைக்குமாறு ஸ்ரீ காமகோடிப் பெரியவாள் ஆக்ஞாபித்திருக்கிறார்கள். பலவிதங்களில் புண்ணியம் கூட்டி வைக்கும் இக்கைங்கரியத்தில் அன்பர்கள் ஈடுபட வேணும். தங்கள் பெயர், விலாசம், கோத்திரம், நட்சத்திரம் முதலிய விவரங்களுடன் கீழ்க் கண்ட முகவரிக்கு ரூ. 8 அனுப்பி வைப்பவர்களுக்கு அர்ச்சனைப் பிரசாதம் அனுப்பப் படும்: பொக்கிஷதார், ஸ்ரீ சங்கர பக்தஜனசபா, 116—A, ராஜவீதி, காஞ்சீபுரம் — 2.



## ஒரு நல்ல ஆத்மாவின் பிரிவு

காந்தியடிகள், ஸ்ரீ ஜமுனாலால் பஜாஜைத் தமது ஐந்தாவது புதல்வர் என்றே கூறுவாராம். தந்தைக்கேற்ற தனயராக விளங்கினார் ஸ்ரீ ஜமுனாலாலின் திருக்குமாரர் ஸ்ரீ கமல நயன பஜாஜ். அவரது தேசபக்தி அப்பழுக்கற்றது. அவரது தொழிலறிவு பல நிறுவனங்களை நிர்வகிக்கும் சிறப்பில் வெளியாயிற்று. பொருட் செல்வத்தைப் போலவே குணச் செல்வத்தையும் குறைவறப் பெற்றிருந்தார். பெருமனத்தவரான ஸ்ரீ கமல நயனர் திடீரென மரணமடைந்தது அவரது ஏராளமான அன்பர்களுக்குப் பேரதிர்ச்சியாகும். பஜாஜ் குடும்பத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட ராஜாஜியின் அநுதாபக் கடிதமே சோக இலக்கியமாக இருக்கிறது. "ஜமுனாலால்ஜியே இரண்டாம் முறை மரணமடைந்தாற்போல் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறோம்" என்கிறார் அவர்.

## மாடபூசி மறைவு



சென்னை மாநகரில் நடக்கும் சமய விழாக்களிலும் கலை நிகழ்ச்சிகளிலும் நெற்றியில் திருமண்ணும், தோளில் ஜரிகை அங்கவஸ்திரமும் துலங்க ஒரு ஸ்ரீ வைஷ்ணவப் பெரியார் சபை நிறைய வந்து அமர்வதுண்டு. மாடபூசி சுதர்சனம் அய்யங்கார் என்ற அந்தப் பழுத்த பழம் பெருமானைச் சென்றடைந்துவிட்டது. ஸ்ரீமத் நிகமாந்த மகாதேசிகனின் நினைவுக் கோயிலான தேசிக பவனத்துக்கும், மற்றும் பல சமய, சமூக, கல்வி நிலையங்களுக்கும் வாரி அளித்திருக்கிறார், மாடபூசி அவர்கள். இவரது மறைவால் சென்னை நகரின் நீண்டகாலப் பிரமுகர் வரிசையில் ஓர் இடம் காலியாகி விட்டது. அவரது குடும்பத்தினருக்கு நமது மனமார்ந்த அநுதாபங்கள்.

## பொருளாதார உலகின் பெரு நஷ்டம்



மாபெரும் பொருளாதார வல்லுநரான டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்கள் மறைந்து விட்டார்கள். கலாசாலைப் பேராசிரியராகப் பணி தொடங்கி, பின்னர் தேசிய, சர்வ தேசிய நிறுவனங்கள் பலவற்றில் தமது பொருளாதார அறிவைப் பொலிவித்தார் அவர். கீழ்நாடுகளுக்கான ஐ. நா. பொருளாதாரக் குழு செயல்பட்டபோது அதன் முதல் பொதுக் காரியதரிசியாக நியமனம் பெற்றவர் அவர். பாரத சர்க்காரின் தேசிய பொருளாதார ஆராய்ச்சி ஸ்தாபனத்தில் டைரக்டர் ஜெனரலாக இருந்து பலப் பல திட்டங்களை வகுத்தவர். 'ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்' என்ற புகழ் கொண்ட பொருளாதார சஞ்சிகையின் ஸ்தாபக ஆசிரியரும் இவரே. இந்தியப் பொருளாதார சங்கத்தின் தலைவராக இருந்தவர். உலகப் பொருளாதார ஸ்தாபனங்கள் பல அவரது ஆராய்ச்சி அறிவை அடிக்கடி துணை கோரி வந்தன. இந்தப் பேரறிஞரை இழந்தது பொருளாதாரத் துறையின் பேரிழப்பாகும். ஸ்ரீ லோகநாதன் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களை அளிக்கிறோம்.



# சிறுவர் இருவரின் சிறப்பு வாக்கு

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்**

பரமேசுவரனுக்கு எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. மகாவிஷ்ணுவுக்கு எத்தனையோ நாமங்கள் இருக்கின்றன. இருந்தாலும் 'நம: பார்வதீ பதயே' என்று ஒருவர் சொன்னவுடன் எல்லோரும் 'ஹர ஹர மகாதேவ' என்ற நாமத்தையே கோஷம் செய்கிறோம். 'லக்ஷ்மீ காந்த ஸ்மரணம்' என்று ஒருவர் சொன்னால் அனைவரும் 'கோவிந்தா, கோவிந்தா' என்ற பெயரைச் சொல்லியே கோஷிக்கிறோம். பார்வதீ பதிக்கு சிவன், ருத்திரன், நடராஜன் என்று எத்தனையோ பெயர்கள் இருந்தாலும் கூட்டமாக கோஷம் செய்யும்போது 'ஹர' நாமமே முன்னால் நிற்கிறது. அப்படியே லக்ஷ்மீ காந்தனுக்கு நாராயணன், மகாவிஷ்ணு, ஸ்ரீநிவாஸன் என்றெல்லாம் பல நாமங்கள் இருந்தபோதிலும், பக்தகோடிகள் சேர்ந்து முழங்குவது 'கோவிந்த' என்ற பெயராகவே இருக்கிறது. இந்த இரண்டு நாமங்களுக்கு மட்டும் இப்படி என்ன விசேஷம், முக்கியமாக ஏராளமான ஜனங்கள் ஒன்று சேர்ந்து இந்த இரு பெயர்களை முழக்குமாறு அவற்றுக்கு என்ன விசேஷம் என்று யோசனை செய்து பார்த்தேன்.

குழந்தையின் வாக்குக்கு விசேஷம் உண்டு. கள்ளம் கபடமில்லாத ஒரு குழந்தை சொல்வது மகான்களின் வாக்குக்குச் சமதையானது. எல்லாக் குழந்தைகளின் வாக்குக்கும் விசேஷம் உண்டு என்றால், தெய்வக் குழந்தைகளாக, அவதாரக் குழந்தைகளாக உள்ளவற்றின் வாக்கு அதிவிசேஷமானதல்லவா? ஹர நாமமும் கோவிந்த நாமமும் இரண்டு அவதாரக் குழந்தைகளின் வாக்கில் விசேஷமாக வந்த பெயர்கள். இந்தப் பெயர்கள் எல்லோரிடமும் தழைத்தோங்க வேண்டும் என்று அந்தக் குழந்தைகள் ஆக்ஞை போட்டன! அதனால்தான் பரமேசுவரனின் பல நாமங்களில் ஹர நாமமும், ஸ்ரீ மகா விஷ்ணுவின் பல நாமங்களில் கோவிந்த நாமமுமே ஜன சமூகத்தின் கோஷ்டி கோஷத்துக்கு உரியனவாயின என்று கண்டுபிடித்தேன்.

அந்த இரு தெய்வக் குழந்தைகள் யார்?

ஒருவர் திருஞான சம்பந்தர். அம்பாளின் க்ஷீரத்தை அருந்தியதால் முருகனாகவே போற்றப்படுபவர். மதுரையில் அவரோடு வாதிட்ட சமணர்கள் புனல் வாதமும் கனல் வாதமும் செய்ய வேண்டும் என்றனர். அதாவது இரு கட்சிக்காரர்களும் தங்கள் கொள்கைகளை ஓலையில் எழுதி வெள்ளத்தில் விட வேண்டும்; பிரவாகத்தை எதிர்த்துக் கொண்டு எவரது ஏடு வருகிறதோ, அவர்களது கொள்கைக்கே வெற்றி என்பது புனல் வாதம். இதே போல் அவரவர் சித்தாந்தம் எழுதிய ஓலையை நெருப்பிலே போட்டால் எது எரியாமலிருக்கிறதோ அதற்கே வெற்றி என்று கொள்வது கனல் வாதம். மதுரையில் சமணரும் சம்பந்தரும் கனல் வாதம் — புனல் வாதம் செய்ததில் சமணரின் ஏடுகள் ஆற்றோடு போயின, நெருப்பில் எரிந்தன. திருஞான சம்பந்தரின் ஓலை பிரவாகத்தை எதிர்த்து வந்தது. தீயிலும் எரியாமல் இருந்தது. பிரவாகத்திலே போட்ட ஓலையில் சம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள் என்ன எழுதினார்?

**வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்**
**வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக**
**ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே**
**சூழ்க வையகமும் துயர் தீர்கவே**

இதில் 'வையகம் துயர் தீர்கவே' என்று உலகமெல்லாம் க்ஷேமமாக இருக்க வேண்டும் — 'ஸர்வேஜனா! ஸுகினோபவந்து'—என்ற தத்துவத்தைச் சொல்கிறார். உலகில் உள்ள ஜீவராசிகள் யாவரும் சௌக்கியமாக இருக்க வேண்டும் என்று சொல்பவர், 'வாழ்க அந்தணர், ஆனினம்' என்று தனியாக பிராமணர்களையும் பசுக்களையும் சொல்கிறாரே, அவை வையகத்தில் சேரவில்லையா, அல்லது ஸ்வாமிகளுக்குப் பட்சபாதமா என்று கேட்கலாம். இந்த இரு உயிரினங்களுக்கும் நடுவில் அவர் 'வானவர்' என்கிறார். வானவருக்கான காரியம் யாகம். வானவர்களை யாகத்தினால் திருப்திப்படுத்தினால் மேற்படி பாட்டின் இரண்டாம் வரியில் சொன்ன தண்புனல்

விழ்கிறது. லோகமனைத்தின் க்ஷேமத்துக்காகவும் யாகம் செய்கிற கடமையைப் பெற்றவன் பிராமணன். யாகத்தில் ஆஹுதி செய்ய அத்தியாவசியமான நெய், பால், மற்றும் அதில் பிரயோஜனமாகும் எரிமுட்டை முதலியன ஆவினத்திடமிருந்தே வருகின்றன. வைதிக யாகங்களில் நம்பிக்கையற்ற சமணரை ஆட்சேபித்த சம்பந்தர் யாகத்தையே முதலில் முக்கியமாகச் சொல்லி, அதில் சம்பந்தப் பட்டிருப்பதால்தான் அந்தணரையும் ஆவினத்தையும் தனிப்பட வாழ்த்துகிறார். யாகம் செய்து மழை கண்டு சுபிட்சமாயுள்ள பூமியில் தர்மத்தை வளர்த்து அதர்மக்காரர்களை அடக்குவதற்காக வேந்தனை வாழ்த்துகிறார். இப்படிப்பட்ட தர்ம ராஜ்யத்தில் எங்கு பார்த்தாலும் 'அரன் நாமமே சூழ்க' என்கிறார் — ''ஹர ஹர'' என்று எங்கு பார்த்தாலும் ஜனங்கள் கோஷிக்க வேண்டும் என்று அந்தத் தெய்வக் குழந்தை போட்ட ஆக்ஞா விசேஷத்தால் தான் இன்றளவும், 'நம: பார்வதி பதயே' என்று ஒருவர் சொன்னால், நாம் அத்தனை பேரும் '*ஹர ஹர மஹாதேவா*' என்கிறோம்.

கோவிந்த நாமத்தைச் சொன்ன தெய்வக் குழந்தை, நம் பகவத்பாதர்களாகிய ஸ்ரீ ஆதி சங்கராசாரியர்களே. எட்டு வயதுக் குழந்தையாக இருந்தபோதே கோவிந்த பகவத்பாதர் என்ற மகானிடம் சந்நியாசம் வாங்கிக் கொண்ட ஸ்ரீ ஆசாரியாளுக்கு 'கோவிந்த' நாமத்திலே விசேஷமான பற்று. காசியில் வயோதிகதசை வந்தும் பகவானைத் தேடாமல் இலக்கணத்தை உருவேற்றிக் கொண்டிருந்த ஒரு பண்டிதரைப் பார்த்ததும் பால சங்கரருக்கு மனம் உருகியது. 'இந்த வியாகரண சூத்திரம் மரணம் வந்த சமயத்தில் காப்பாற்றுமா ? அப்போது வாக்கிலும் மனசிலும் கோவிந்த நாமம் இருந்தாலே அல்லவா சம்ஸாரத்திடமிருந்து விடுபடலாம்?' என்று பண்டிதருக்கு உபதேசித்தார். அந்த ஒரு பண்டிதரை முன்னிலைப்படுத்தி, உலகத்தை எல்லாம் பார்த்து, ''பஜகோவிந்தம், பஜ கோவிந்தம்'' என்று பாடினார் ஸ்ரீ சங்கர பகவத்பாதாள். பரமேசுவர அவதாரமான குழந்தையின் கட்டளைப்படிதான் இப்போதும் நாம், ''கோவிந்தா, கோவிந்தா'' என்று கூட்டத்திலே கோஷிக்கிறோம்.

## வைணவப் பெரும்பதியில் வைணவப் பெரும் பணி

ஆழ்வாராதிகளால் மங்களா சாஸனம் செய்யப்பட்ட 108 திவ்ய தேசங்களில் ஒன்று திருவஹீந்திரபுரம். தென் ஆர்க்காடு மாவட்டத்தில் கடலூருக்கு அருகே திருவேந்திர புரம் என்று இன்று வழங்கப்படும் இத்தலம், புராணப் பிரசித்தி பெற்றது. இங்கு தேவ நாதன் என்ற பெயரில் வதியும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி, பிரம்மனுக்கும் சிவனுக்கும் உரிய லட்சணங்களையும் தம்மிலேயே தாங்கி, ''மூவராகிய மூர்த்தி'' என்னும் திருநாமம் கொண்டிருக்கிறார். திருப்பதி ஸ்ரீ வேங்கடரமண ஸ்வாமிக்கு நேர்ந்து கொண்டவர்கள், அதற்குப் பதில் திருவஹீந்திரபுரத்தில் காணிக்கை செலுத்துவதும் உண்டு என்பதிலிருந்தே தேவநாதப் பெருமானின் மகிமையை உணரலாம். ஔஷதகிரிக்கும் கெடிலநதிக்குமிடையே ரம்மியமான சூழலில் அமைந்துள்ள திருவேந்திரபுரத்தில் தான் ஸ்ரீமந் நிகமாந்த மகா தேசிகன் தவமிருந்து, கருடாழ்வாரிடமிருந்து ஹயக்ரீவ மந்திரம் பெற்றார். இங்குள்ள ஸ்ரீ ராம பிரானின் திருமூர்த்தம் சொல்லொணா வடிவழகு சொட்டுவதாகும். இவ்விதம் பல சிறப்புக்கள் கொண்ட திருவஹீந்திரபுரம் தேவநாதன் ஆலயத்துக்குப் பெரிய அளவில் திருப்பணி நடக்கத் தேவை ஏற்பட்டிருக்கிறது. செல்வாக்கு மிக்கதொரு குழு திருப்பணியை மேற்கொண்டிருக்கிறது. ஆலயத்திலுள்ள எல்லா விமானங்களையும் புதுப்பிப்பது, ஸ்தூபிகளுக்குத் தங்கத் தகடு வேய்வது, கல்யாண மண்டபம் கட்டுவது, யாத்ரீகர் விடுதி கட்டுவது, தண்ணீர் வசதி செய்வது— என்றிப்படிப் பல அம்சங்களைக் கொண்ட பெரும்பணிக்கு நாலு லக்ஷம் ரூபாய் பிடிக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். திருவஹீந்திரபுரம் செங்கமலத் தாயாருக்கும் ஸ்ரீ தேவநாதனுக்கும் மே மாதம் 17ந் தேதி மகா ஸம்ப்ரோக்ஷணம் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. அன்பர்கள் லக்ஷ்மீநாயகனுக்குத் திரவியம் வழங்கி லக்ஷ்மீ கடாக்ஷம் பெற வேணும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: பொருளாளர், திருப்பணிக் குழு, தேவநாதஸ்வாமி தேவஸ்தானம், திருவஹீந்திரபுரம், கடலூர் வழி.



வாய் நாற்றம் உங்களை
விலகி நிற்கச்செய்கிறது




DCG.4-TM

# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள் !

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் வியக்கத்தக்க பெப்பர்மின்ட் சுவையினால்— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே,
வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



கால்கேட் டூத் பிரஷ்




உங்களைச் சுற்றிலும்
சந்தனத்தின்
நறுமணம் கமழட்டும்

MOLOY

**மலாய் சந்தன சோப்பும்
டால்கம் பவுடரும்
நாள் எல்லாம்
உங்களை எழிலுடனும்
நறுமணத்துடனும்
திகழச் செய்ய
மிகப் பொருத்தமான
ஒரு ஜோடி**

இந்த சந்தன சோப்பு - குளிர்ச்சியானது மிருதுவானது, சுகமானது. உங்களது சருமத்துக்கு எழிலூட்டுவது. இந்த சந்தனப் பவுடர் - மிருதுவானது. புத்துணர்ச்சியூட்டுவது. இந்த சோப்பையும் பவுடரையும் உபயோகித்தால் வியர்வை கொட்டும் ஒரு வெப்பமான நாளிலுங்கூட நீங்கள் சந்தனத்தின் தன்னிகரில்லாத நறுமணம்கமழ எழிலுடனும் தூய்மை உணர்ச்சியுடனும் இருப்பீர்கள்

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெடின் தயாரிப்புகள்.



# அலை ஓசை

## அமரர் கல்கி

### 34. கல்யாணமும் கண்ணீரும்

ராஜம்பேட்டை அக்கிரகாரம் திமிலோகப்பட்டது. கிட்டாவய்யர் வீட்டுக் கல்யாணம் என்றால் சாதாரண விஷயமா! விவாக தினத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்னாலேயே மேளம் கொட்டியாகி விட்டது. பிறகு ஊரில் எந்த வீட்டிலும் அடுப்பு மூட்டப்படவில்லை. எல்லோருக்கும் சாப்பாடு கிட்டாவய்யர் வீட்டிலேதான்!

வீதி முழுவதும் அடைத்துப் போட்டிருந்த பந்தலில் ஊர்க் குழந்தைகள் சதா காலமும் கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

மாட்டுச் சதங்கைகளின் சத்தம் கேட்டவண்ணமாக இருந்தது. வண்டிகளுக்கு ஓய்ச்சல் ஒழிவென்பதே கிடையாது.

கல்யாணத்துக்கு முதல் நாள் இரண்டு கல்யாணத்துச் சம்பந்திகளும் வந்துவிட்டார்கள். பிறகு ஊருக்கு உற்சவத் தோற்றம் உண்டாகிவிட்டது. தேர்த் திருவிழா மாதிரி ஜே ஜே என்று ஏகக் கூட்டம். ஜானவாச ஊர்வலம் மேளதாளங்களுடனும் மத்தாப்பு வாண வேடிக்கைகளுடனும் அமோகமாக நடந்தது.

இவ்வளவு குதூகலத்துக்கும் உற்சாகத்துக்குமிடையில் ஒரே ஒரு விஷயம் மட்டும் எல்லாருக்கும் கொஞ்சம் மனச் சஞ்சலத்தை உண்டாக்கி வந்தது. அது சீதாவின் தகப்பனார் துரைசாமி ஐயர் இன்னும் வந்து சேரவில்லையே என்பது தான்.

ஆனால் இது காரணமாகச் சீதாவின் கல்யாணத்தை நிறுத்தி வைக்கும் பேச்சு ஏற்படவில்லை. ராஜம்மாளின் மனம் எத்தகைய வேதனை அடைந்திருந்ததென்பதை நாம் ஊகித்துக் கொள்ளலாம். ஆயினும் அவள் அதை வெளியில் சிறிதும் காட்டிக் கொள்ளவில்லை. தன்னுடைய கணவர் வந்து சேரா விட்டாலும் கல்யாணத்தை நடத்திவிட வேண்டியதுதான் என்று சொல்லி விட்டாள். இந்தக் கல்யாணத்தை மனப்பூர்வமாக ஆமோதித்துத் துரைசாமி ஐயர் எழுதியிருந்த கடிதம் அவளுக்கு இந்த விஷயத்தில் மிக்க ஒத்தாசையாயிருந்தது. அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்த பிறகு சம்பந்திகளுக்கு ஏற்பட்டிருந்த சிறிது தயக்கமும் நீங்கி விட்டது. பிறகு எல்லோருமே ரயில்வே உத்தியோகத்தைப் பற்றிப் பரிகாசமாகப் பேசிச் சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவர், ''எனக்குச் சீமந்தக் கல்யாணம் வருகிறது. மூன்று நாள் லீவு வேண்டும்!'' என்று கேட்டதற்கு வெள்ளைக்கார மேல் உத்தியோகஸ்தர், ''அதெல்லாம் முடியாது;

சீமந்தக் கல்யாணத்தைப் பார்த்துக்கு ஆள் போட்டு நடத்திக்கொள்!'' என்று பதில் சொன்னார் அல்லவா? இந்தக் கதையைப் பலவிதமாக மாற்றி ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.

இரவு பத்து மணி வரையில், அதாவது கடைசி ரயிலுக்குக்கூடத் துரைசாமி வரவில்லை என்று ஏற்பட்ட பிறகு கிட்டாவய்யர் தம் சகோதரியுடன் ஆலோசனை செய்தார். ராஜம்மாளின் தமக்கை அபயாம்பாளும் அவளுடைய கணவரும் சீதாவைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று.

''சீதா கொடுத்து வைத்த புண்ணிய சாலி; அதனாலேதான் வைதிக ஆசார அனுஷ்டானமுள்ள தம்பதிகள் அவளைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க நேர்ந்திருக்கிறது'' என்று ராஜம்மாள் தன் மனத்தைத் திருப்தி செய்து கொண்டாள்.

அபயாம்பாளுடைய பெருமைக்கோ அளவேயில்லை. ''இப்படி அந்தப் பிராமணர் பண்ணிவிட்டாரே?'' என்று புகார் சொல்லிக் கொண்டே அவசர அவசரமாக ஓடி ஓடிக் காரியங்களைச் செய்தாள். ''நாளைக்குப் பொழுது விடிந்தால் நான் பட்டுப் பாயில் உட்கார்ந்தேயிருக்க வேண்டும். ஒரு காரியமும் செய்ய முடியாது. இன்றைக்குச் செய்தால்தான் செய்தது!'' என்று பறந்தாள்.

கிட்டாவய்யர் தாம் செய்ய வேண்டிய காரியங்களிலெல்லாம் லலிதாவையும் சீதாவையும் சரிசமமாகப் பாவித்தே சகல கல்யாண ஏற்பாடுகளும் செய்தார். பெண்ணுக்கு முகூர்த்தப் புடவையாகட்டும், மாப்பிள்ளைக்கு முகூர்த்த வேஷ்டியாகட்டும், ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வு இல்லாமல் சமமாக வாங்கியிருந்தார். ஆனால், வீட்டு ஸ்திரீகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட சீர்வரிசைகளில் ஏற்றத்தாழ்வு இருக்கத்தான் செய்தது. சரஸ்வதி அம்மாள் தன் மகள் லலிதாவுக்கு ஒரு விதமாகவும் சீதாவுக்கு ஒருவிதமாகவும் தான் செய்தாள். சரஸ்வதி அம்மாளின் தாயார் இந்த வித்தியாசம் காட்டுவதில் மும்முரமாக இருந்தாள். ஆனால் ராஜம்மாளின் தமக்கை அபயாம்பாளோ அந்த மாதிரி ஏற்றத்தாழ்வுகளை நீக்குவதில் அக்கறை காட்டினாள். அடிக்கடி ராஜம்மாளிடம் வந்து, ''இதென்னடி அநியாயம்? இந்த மாதிரி ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் இன்னொரு கண்ணுக்குச் சுண்ணாம்பும் தடவுவது உண்டா? இரண்டு கண்களையும் சமமாகப் பாவிக்க வேண்டாமா? இப்படிப் பாரபட்சம் செய்கிறாளே மன்னி? மன்னி செய்கிறது ஒரு பங்கு என்றால், அவள் அம்மா செய்கிறது மூன்று பங்காக இருக்கிறது. நானும் நீயும் இந்த வீட்டில் பிறந்தவர்கள்தானே? லலிதாவுக்கு இருக்கிற பாத்தியதை சீதாவுக்கு இல்லாமல் போய்விட்டதா?'' என்று புலம்பினாள். அவளைச் சமாதானப்படுத்துவது ராஜம்மாளுக்குப் பெரும் வேலையாயிருந்தது. ''நீ வாயை மூடிக் கொண்டு இரு, அக்கா! அந்த மனுஷர் இப்படி வருகிறதாகச் சொல்லி வராமல் மோசம் பண்ணிவிட்டதற்கு ஏதோ இந்தமட்டில் நடக்கிறதே என்று நான் சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கிறேன். இந்தக் காலத்தில் யாருக்கு யார் இவ்வளவு தூரம் செய்வார்கள்? அண்ணாவின் நல்ல குணத்தினால் இதுவாவது நடக்கிறது! இல்லாவிட்டால் என் கதி என்ன? பகவானுடைய அருளால் எனக்கு வாய்த்திருக்கிற மாப்பிள்ளையும் சம்பந்திகளும் 'அது இல்லை; இது இல்லை' என்று குற்றம் சொல்லாதவர்கள். அப்படியிருக்க நீ எதற்காக வீணில் அலட்டிக் கொள்கிறாய்? நடந்த



வரையில் சந்தோஷப்பட வேண்டாமா?'' என்று ராஜம்மாள் அக்காவுக்கு ஆறுதல் கூறினான்.

சீதாவுக்கு மனத்துக்குள் எவ்வளவோ குறை இருக்கத்தான் செய்தது. அப்பா வராமல் இருந்துவிட்டாரே என்று ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. லலிதாவுக்குச் செய்கிற மாதிரி தனக்குச் செய்வாரில்லையே என்று துக்கம் பீறிக் கொண்டு வந்தது. அந்த மாப்பிள்ளை சம்பந்திகளுக்கு நடக்கிற உபசாரங்கள் தன் கரம் பிடிக்க வந்த மணாளனுக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் நடக்கவில்லையே என்று கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அவையெல்லாம் சீதா மனத்துக்குள் அடக்கிக் கொண்டு, ''நடக்கட்டும்; நடக்கட்டும். லலிதாவுக்கு எவ்வளவு வேணுமானாலும் நடக்கட்டும். ஆனால் நான் அடைந்த பாக்கியம் அவளுக்கு ஏது? என் கணவனுக்கு அவள் கணவன் இணையாவானா?'' என்று எண்ணி முக மலர்ச்சியுடன் இருந்து வந்தாள்.

இவர்கள் எல்லாரைக் காட்டிலும் அதிகமான மன வேதனைக்கு உள்ளாகியிருந்தான் சூரியா. இதற்குக் காரணம் கல்யாணத்துக்கு முதல் நாள் ராஜம்மாள் பெயருக்கு வந்த ஒரு தந்திதான். வழக்கம்போல் தபால் வாங்குவதற்குத் தபால் ஆபீஸுக்குப் போயிருந்தபோது, தபால் ரன்னர் தனியாகக் கொண்டு வந்திருந்த தந்தியையும் அவன் வாங்கிக் கொண்டான். அதைப் பிரித்துப் படித்ததும் அவன் திடுக்கிட்டுச் சொல்ல முடியாத மனக் குழப்பத்துக்கு ஆளானான். ''கல்யாணத்தை நிறுத்திவிடவும். காரணம் நேரில் வந்து தெரிவிக்கிறேன் — துரைசாமி'' என்று அந்தத் தந்தியில் எழுதியிருந்தது.

—



அது விஷயமாக என்ன செய்வது என்று சூரியாவுக்கு இலேசில் தீர்மானம் செய்ய முடியவில்லை. சீதாவின் கல்யாண விஷயமாக மொட்டைக் கடிதங்களை எழுதிய விஷமிகள் இந்தத் தந்தியையும் கொடுத்திருக்கலாம். ஏன் கொடுத்திருக்கக் கூடாது? அநேகமாக உண்மை அப்படித்தான் இருக்கும். ஆனால் தந்தியை மற்றவர்களிடம் காட்டினாலும் அதைப் பற்றிச் சொன்னாலும் பெருங் குழப்பம் உண்டாகிவிடும். அது பொய்த் தந்தி என்று அவர்கள் நம்புவது கடினம். எல்லா ஏற்பாடுகளும் நடந்து சம்பந்திகளும் வந்து இறங்கிய பிறகு கல்யாணத்தை நிறுத்துவது என்பது எவ்வளவு அசம்பாவிதம்? சீதாவும் அவள் தாயாரும் எவ்வளவு துக்கம் அடைவார்கள்? எல்லாருக்குமே எவ்வளவு அசந்துஷ்டி உண்டாகும்? சம்பந்திகள்தான் என்ன நினைப்பார்கள் ? ஊரார் என்ன சொல்வார்கள்? சுற்றுப் புறத்துக் கிராமவாசிகள் எல்லாம் கேலி பண்ணிச் சிரிப்பார்களே? ஒரு பொய்த் தந்தி. இவ்வளவு விபரீதங்களையும் விளைவிப்பதற்கு இடங் கொடுத்து விடுவதா?

எது எப்படியிருந்த போதிலும் இந்தத் தந்தியை இப்போது எல்லோரிடமும் காட்டிக் குழப்பம் விளைவிக்கக் கூடாது என்று சூரியா முடிவு செய்தான். இராத்திரிக்குள் எப்படியும் துரைசாமி ஐயர் வந்துவிடக் கூடும். அவர் வந்த பிறகு அப்படி அவசியமாயிருந்தால் கல்யாணத்தை நிறுத்திக் கொள்ளட்டும். அப்போதுகூட அவரைக் காரணம் கேட்டு வாதாடிப் பார்ப்பது தன்னுடைய கடமை. எது எப்படி யாரும் தந்தியைப் பற்றி இப்போது பிரஸ்தாபிக்கக் கூடாது. இராத்திரியும் துரைசாமி ஐயர் வராவிட்டால் பார்த்துக் கொள்ளலாம்.

இவ்வாறு முடிவு செய்திருந்த சூரியா இராத்திரி வந்து சேரும் வண்டியிலும் துரைசாமி ஐயர் வராமற் போகவே முன்னைக் காட்டிலும் அதிகக் குழப்பத்தில் ஆழ்ந்தான். ஜானவாஸ ஊர்வலம் எல்லாம் நடந்த பிறகு தந்தி பற்றிப் பிரஸ்தாபிப்பது மேலும் கஷ்டமாகிவிட்டது. யாரோ ஒரு முட்டாள், மடையன், பொறாமைப் பிசாக கொடுத்திருக்கக் கூடிய பொய்த் தந்தி காரணமாக இவ்வளவு ஏற்பாடுகளும் நின்றுபோவதால் சீதாவுக்கும் ராஜம்மாளுக்கும் ஏற்படக் கூடிய அதிர்ச்சியை நினைத்தபோது சூரியாவுக்குத் தந்தியைக் கொடுக்கும் தைரியம் தனக்கு வரவே வராது என்று தோன்றிவிட்டது. "கடவுள் விட்ட வழி விடட்டும்; நடந்தது நடக்கட்டும்; தந்தியை அமுக்கிவிடுவதுதான் சரி" என்று முடிவு செய்தான். ஆனால் அமுக்கிய தந்தி அவனுடைய மூளைக்குள் இருந்து தொல்லைப்படுத்திக் கொண்டேயிருந்தது. இரவில் ஒரு கணமும் தூக்கமில்லாமல் செய்து கொண்டிருந்தது.

மறுநாள் பொழுது விடிவதற்குள் கல்யாண முகூர்த்தத்துக்குரிய ஏற்பாடுகள் தொடங்கி விட்டன. பத்து மணிக்குள்ளே முகூர்த்தமாகையால் ஒரே பரபரப்பாகக் காரியங்கள் நடைபெற்றன. "முகூர்த்தம் வந்துவிட்டது! சீக்கிரம்! சீக்கிரம்!" என்று தலைக்குத் தலை கூச்சல் போட்டார்கள். மாப்பிள்ளைகள் இரண்டு பேரும் காசி யாத்திரை புறப்பட்டுப் பத்து அடி தூரம் போகக்கூட இடம் கொடுக்கவில்லை. "எல்லாம் போதும்; காசிக்கே போய் விடாதீர்கள் !" என்று சத்தம் போட்டார்கள். மாமா தோன் தூக்குவது, மாலை மாற்றுவது எல்லாம் சட்பட் என்று நடந்தன. கன்னிகா தான — திருமாங்கல்யதாரணத்துக்கு உரிய நல்ல முகூர்த்தம் வந்தது. இரட்டை நாதஸ்வரங்கள் காதைத் துளைக்கும்படி கிறீச்சிட, தவுல் வாத்தியங்களை அடித்த அடியில் வீடெல்லாம் கிடுகிடுக்க, வேத மந்திர கோஷங்கள் வானை அளாவ, வீட்டு ஸ்திரீகள் நாற்றெட்டு அபஸ்வரங்களுடன் "கௌரி கல்யாணம்" பாட, சீதாவின் கழுத்தில் ஸ்ரீ சௌந்தரராகவன் திருமாங்கல்யத்தைக் கட்டினான். அதே சமயத்தில் பட்டாபிராமன் லலிதாவின் கழுத்தில் தாலியைக் கட்டி முடிச்சுப் போட்டான்.

திருமாங்கல்யதாரணம் ஆன பிறகு பரபரப்பும் சத்தமும் ஓரளவு அடங்கின. வீட்டுக்குள்ளே அத்தனை நேரம் நெருக்கி அடித்துக் கொண்டு வியர்க்க விருவிருக்க உட்கார்ந்திருந்தவர்கள், இனித் தங்களுடைய பொறுப்புத் தீர்ந்தது என்பது போலக் கொஞ்சம் காற்று வாங்க வாசற் பக்கம் சென்றார்கள்.

சூரியாவும் வெளியே வந்தான். காலையிலிருந்து உள்ளுக்கும் வாசலுக்கும் ஆயிரம் தடவை நடந்திருந்த சூரியாவின் மனம் இப்போது சிறிது அமைதி அடைந்தது. "கல்யாணம் நடந்து விட்டது. இனி மாறுவதற்கில்லை" என்ற எண்ணம் அவனுக்கு அந்த நிம்மதியை அளித்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் வண்டி மாட்டின் சதங்கைச் சத்தம் 'ஜில் ஜில்' என்று கேட்டது. தெரு முனையில்

# வாழ்வே வாடாத புதுமையின் சித்திரம்



## 'க்ளிக்' அடித்துவைப்பீர்... நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III, மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்—நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயார்த் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லீவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.



ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**

பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை.

® புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆண்ட்வெர்ப்/ லீவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).



SIMOES/AG/1 TAM



ஆக்பா க்ளிக்—
இந்தியாவின் உன்னத
புகழ்பெற்ற காமிரா.

अहं त्वामेवमुपदिशामि :—

सत्यं वद।

धर्मं चर।

स्वाध्यायान्मा प्रमदः।

आचार्याय प्रियं धनमाहृत्य

प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः।



## In 10 years 55 million Indians learnt that mother tongue is more than words they picked up from their mothers.

## Because of paper!

First halting utterances learnt at mother's knees. First hints of knowledge. But later in life all what our mothers' tongue had taught us seems only a starting point. New facts have to be learnt to live. That is possible because of paper. A fact which 55 million new literates in India learnt between 1961 and 1971. And West Coast Paper is fulfilling the need of more, and better, writing and printing paper. Paper that promises social and economic progress. West Coast Paper, the professionals for printing, writing and packaging paper.

**West Coast Paper**
Shreeniwas House, Waudby Road, Bombay 1.

PRESYI

# கால்ஃப்

''அரசே! தோல்ப... நடந்த பந்தயத்தில் அவருக்குக் கிடை...த எண்ணிக்கையை விடக் குறைவாகவே நான் பெற்றேன்!'' என்றார் ஹ்யூபர்ட் சுற்றி கவனித்து.

அமெரிக்காவில் கால்ஃப் பிரசித்தமான விளையாட்டு. ஜனாதிபதி முதல் (படம்) சாதாரணப் பிரஜை வரை ஆடும் ஆட்டம். ஆண்கள், பெண்கள் இருவராலுமே விளையாடப்படுகிறது. 25 லட்சம் கால்ஃப் ஆட்டக்காரர்கள் ஐந்து லட்சம் 'காடி' (caddies)களை உதவியாளர்களாகப் பயன்படுத்துகிறார்கள். 2,800 தனியார் கால்ஃப் கிளப்களை உபயோகப்படுத்துகிறார்கள். அன்றன்றைக்குப் பணம் கொடுத்து ஆடும் கிளப்கள் 1200ம், 700 பொதுத்துறை கிளப்களும் உள்ளன.

கால்ஃப் ஆட்டத்துக்கு 1491ல் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் தடை விதித்தது. நான்காம் ஜேம்ஸ் மன்னர் அந்தச் சட்டம் நிறைவேறாமல் செய்து, கால்ஃபுக்கு உயிரூட்டினார்.

5. கால்ஃப்

1457ல் ஸ்காட்லாந்து நாடாளுமன்றம் 'மக்கள் கால்ஃப் ஆடக் கூடாது; அவர்கள் மிக முக்கியமான வில் பயிற்சி பெற முடியாமல் இந்த ஆட்டம் தடுத்துவிடுகிறது. நாட்டின் பாதுகாப்புக்குத் தேவையான வில்பயிற்சியைப் புறக்கணிக்கவிடலாமா?'' என்று விவாதித்ததாம். இதனால் கால்ஃப் பிரபலமாவது தடைப்படவில்லை.

கால்ஃப் ஆட்டம் ரெபரியோ அம்பயரோ இல்லாமல் ஆடப்படும் ஆட்டம். சரித்திர ஆராய்ச்சியாளர்கள் பதினான்காம் பதினைந்தாம் நூற்றாண்டிலேயே கால்ஃப் ஆடப்பட்டதாகக் கூறுகிறார்கள்.

ஒரு சரித்திரக் காட்சி: அரசர் ஜான் மைதானத்துக்கு எதிரே ஒரு மேடையில் வீற்றிருந்தார், கால்ஃப் ஆட்டத்தைப் பார்க்க. ஆர்ச் பிஷப் ஸ்டீபன் லாங்க்டன் மண்டியிட்டு அமர்ந்து நார்மன் ஹ்யூபர்ட்க்கு வெற்றி கிடைக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்தார். இன்னும் அரசப் பிரதானிகள் தங்கள் ஆயுதங்கள் மின்ன அமர்ந்திருந்தனர்.

''ஹ்யூபர்ட்! உன் எதிரி லாக்சிலே எப்போதாவது தோற்கடித்தது உண்டா?'' என்று கேட்டார் மன்னர்.

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்

ஸ்காட்லாந்து ராணி மேரியே முதன் முதலில் கால்ஃப் ஆடிய பெண்மணி என்ற புகழைப் பெறுகிறாள். அவள் தனக்காகப் பந்தடிக்கும் குச்சிகளை ஏந்தி வழிகாட்டி அழைத்துச் சென்ற பையனை கேடட் என்று அழைத்தாள். இதுவே பிறகு 'காடி' (caddie) ஆயிற்று.

கால்ஃப் சாம்பியன் டாம் மாரிஸ் ஸ்காட்லாந்தில் உள்ள பிரெஸ்ட்விக் கால்ஃப் மைதானத்தையே பரிசாகப் பெற்றார். எப்படியெனில் மூன்று தடவை அந்த மைதானத்தில் ஆடி வென்ற சாம்பியனுக்கு அந்த மைதானம் சொந்தம் என்று அறிவிக்கப் பட்டது. அதையொட்டி 1868, 1869, 1870 வருஷங்களில் கால்ஃப் ஆட்டத்தில் ஜெயித்து மைதானத்தைப் பெற்றார்.

பந்தைப் பொறுக்கும் பணியாளராக ஊழியம் புரிய ஆரம்பித்த பிரான்ஸிஸ் குமெட் நாளடைவில் சிறந்த ஆட்டக்காரராகி இரு தலைசிறந்த பிரிட்டிஷ் கால்ஃப் சாம்பியன்களை ஜெயித்துப் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியிருக்கிறார். --குண்டுமணி

கிட்டாவய்யரின் பெட்டி வண்டி வந்தது. முதல் நாள் மாலே ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்க் காத்துக் கொண்டிருந்த வண்டிதான். அது வெற்று வண்டியாக வரவில்லை. உள்ளே உட்கார்ந்திருந்தவர் பம்பாய் அத்திம்பேராகத்தான் இருக்க வேண்டும்.

சூரியா பரபரப்புடன் வண்டியை எதிர்கொண்டழைப்பதற்கு முன்னால் சென்றான். கல்யாணப் பந்தலின் முகப்பில் வண்டி நின்றது. வண்டியிலிருந்தவர், இறங்குவதற்குள்ளே சூரியா, ''அத்திம்பேரே! என்ன இப்படிச் செய்துவிட்டீர்களே! உங்களுக்காகக் காத்திருந்து காத்திருந்து இங்கே எல்லோருடைய கண்ணும் பூத்துப் போய்விட்டது!'' என்று சொன்னான்.

வண்டிக்குள் இருந்தது துரைசாமி ஐயர்தான். அவர் சூரியாவை ஏற இறங்கப் பார்த்தார்.

''என் பெயர் சூரியா. சீதாவின் அம்மாஞ்சி நான்!'' என்று சூரியா தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டான்.

''ஓகோ! கிட்டாவய்யரின் இரண்டாவது பையனா?''

''ஆமாம், அத்திம்பேரே! ஏன் இத்தனை தாமதமாய் வந்தீர்கள்? பதினைந்து நிமிஷம்தான் ஆயிற்று திருமாங்கல்யதாரணம் நடந்து. பெரிய அத்தையும் அவளுடைய அகத்துக்காரரும் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்கள்!''

''என்ன? என்ன! திருமாங்கல்ய தாரணமா! யாருக்கு? எப்போது?''

''ஏன்! லலிதா, சீதா இரண்டு பேருக்குந்தான்.''

''சீதாவுக்கா? சீதாவுக்குக் கூடவா? மாப்பிள்ளை யார்?''

''சௌந்தர ராகவன்தான்! என்ன அத்திம்பேரே? உங்களுக்குக் கல்யாணக் கடுதாசி வரவில்லையா? ஆனால் உங்களுக்குத்தான் முன்னமே தெரியுமே? தில்லியிலிருந்து எழுதி யிருந்தீர்களே!''

''நான் ஒரு தந்தி கொடுத்திருந்தேனே?'' என்று துரைசாமி ஐயர் கேட்ட போது அவருடைய பேச்சுக் குளறியது.

''தந்தியா? ஒன்றும் வரவில்லையே? என்ன தந்தி?'' என்று சூரியா துணிச்சலாகக் கேட்டான்.

''சீதாவின் கல்யாணத்தை நிறுத்தி விடும்படி தந்தி கொடுத்திருந்தேன். அது வரவில்லையா?''

சூரியா தன் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டே, ''அத்திம்பேரே! இப்போது நினைவு வருகிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்னால்தான் ஒரு தந்தி வந்தது. கல்யாண தடபுடலில் அதை நான் பிரித்துக்கூடப் பார்க்கவில்லை. அதை அத்தையிடம் கொடுக்கவும் சந்தர்ப்பப்படவில்லை. இதுதானா நீங்கள் கொடுத்த தந்தி?'' என்று சட்டைப் பையில் துழாவித் தந்தியை எடுத்துக் கொடுத்தான்.

துரைசாமி ஐயர் தந்தியைப் பிரித்துப் பார்த்தார். ''ஆமாம், இதுதான்! ஆகா! இது ஏன் நேற்றைக்கே வரவில்லை? பட்டிக்காடு ஆனபடியால் இப்படித் தாமதித்து வந்ததாக்கும். எல்லாம் கடவுளுடைய செயல். நாம் என்ன செய்யலாம்? சூரியா! இந்தத் தந்தியைப் பற்றி ஒருவரிடமும் சொல்லாதே!'' என்றார்.

''ஆம்; அத்திம்பேரே! இனிச் சொல்லி என்ன பிரயோஜனம்? நடந்தது நடந்து விட்டது!'' என்றான் சூரியா.

''ஆமாம்; நடந்தது நடந்து விட்டது. கடவுளுடைய சித்தம் அப்படி!'' என்று சொல்லிவிட்டுத் தந்தியைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டார் துரைசாமி.

* * *

இது வரை சீதா அடிக்கடி தன் கடைக்கண்ணால் மாப்பிள்ளை சௌந்தர ராகவனைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள். திடீரென்று வாசலில் வாசற்படி வழியாகத் தன் தந்தை வருவதைப் பார்த்தாள். அவ்வளவு நேரமும் அவள் மனத்துக்குள் அடக்கி வைத்திருந்த அழுகை பீறிக் கொண்டு வந்துவிட்டது. விசித்து விசித்து விம்மி விம்மி அழத் தொடங்கினாள். கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகியது.

ராஜம்மாள் உணர்ச்சி மிகுதியினால் செயலற்றுத் தூணோடு தூணாக நின்றாள். ஆகையால் அவளால் பெண்ணைத் தேற்றுவதற்கு முடியவில்லை. அந்தக் கடமையை, சீதாவைச் சற்று முன்னே கன்னிகாதானம் செய்து கொடுத்த அபயாம்பாள் செய்தாள். ''அசடே! எதற்காக அழுகிறாய்? அப்பா தான் வந்து விட்டாரே! இந்தமட்டும் வந்தாரே என்று சந்தோஷப்படு!'' என்றாள். சீதாவின் மாமியாரும் அருகில் வந்து தேறுதல் கூறினாள். பக்கத்தில் உட்கார்ந்து சீதாவின் புடவைத் தலைப்பையும் மாப்பிள்ளையின் அங்கவஸ்திரத்தின் முனையையும் முடிச்சுப் போட முயன்று கொண்டிருந்த சுண்டுப் பயல் கூடத் தேறுதல் கூறினான். ''அழாதே! அத்தங்கா! அழுதால் கண் மை எல்லாம் கன்னத்தில் வழிந்துவிடும்!'' என்று சொன்னான்.

துரைசாமி ஐயர் வந்து சீதாவின் அருகில் உட்கார்ந்து. ''அழாதே, அம்மா! ரயில் இப்படி மோசம் செய்து விட்டது! இல்லாவிடில் நான் வராமல் இருப்பேனா?'' என்று சொல்லிச் சீதாவின் முதுகை மிருதுவாகத் தட்டிக் கொடுத்தார்.

அப்படியும் அழுகை நிற்காததைக் கண்ட சௌந்தரராகவன் இலேசாகத் தன் மனைவியின் கரத்தைத் தொட்டு, ''சீதா!'' என்றான்.

சீதாவின் கண்ணீர்ப் பெருக்கு உடனே நின்றது. அவள் கண்ணீர் ததும்பிக் கொண்டிருந்த தன் வட்டமான பெரிய கண்களால் சௌந்தரராகவனை ஒரு தடவை பார்த்தாள். அந்தப் பார்வையில் எத்தனையோ விஷயங்கள் பொதிந்து கிடந்தன. வாயினால் விவரிக்க முடியாத இதயத்தின் மர்மச் செய்திகள் எவ்வளவோ அந்தப் பார்வையில் செறிந்திருந்தன.

காதல் என்னும் அகராதியின் உதவி கொண்டு சௌந்தரராகவன் அந்தப் பார்வையின் பொருள்களை அறிந்து கொண்டான். (தொடரும்)



# வட்டமேஜை

## கார்ப்பரல்களின் கானம்

இளைஞர் மலரைக் கண்டேன். ஒரு சில நல்ல இளைஞர்களைப் பார்த்து மற்ற இளைஞர்கள் நல்ல வழி திரும்ப இது போன்ற மலர்கள் பெரிதும் உதவும். இளைஞர்களைப் பற்றி நினைக்கும்பொழுது, பல இடங்களில் பக்திப் பாடல்களைப் பாடி இங்குள்ள ரசிகர்களை மகிழ்விக்கும் திரு தேவாஜி ராவ், திரு தியாகராஜன் ஆகியோர் நினைவு வந்தது.

சென்ற கந்த சஷ்டியன்று இங்குள்ள உத்தர ஸ்வாமி மலையில் பாட ஆரம்பித்த இவர்கள் சென்ற மாதத்துக்குள் தில்லியில் உள்ள தென்னிந்திய சபாக்கள் எல்லாவற்றிலும் பாடி விட்டார்கள். நாலு மாதங்களுக்குள் பதினாறு தடவை பாடிய இவர்கள் முகத்தில் சதா புன்னகை தவழ்கிறது. இருபத்தைந்து வயது இருபத்தாறு வயது நிரம்பிய இவர்கள் இங்குள்ள சுவாமிநாத ஸ்வாமியின் மீது பல பாடல்கள் இயற்றி, சொந்த மெட்டமைத்து, பாடி, ரசிகர்களின் மனம் கவர்ந்திருக்கிறார்கள்.

இந்திய விமானப் படையில் கார்ப்பரல்களாகப் பணிபுரிகின்றனர் இந்த இருவரும். பாடுவதற்குப் பணம் வாங்குவதில்லை. முருகன் கோயில் திருப்பணிக்கே வழங்குகிறார்கள்.

போட்டோ: தில்லி தமிழ்ச் சங்கத்தில் திரு தேவாஜிராவ், திரு தியாகராஜன் ஆகியோருக்குத் தபேலா வாசிப்பவர் கார்ப்பரல் மாதவன்; ஹார்மோனியம்: சார்ஜண்ட் சார்லஸ்.

புதுதில்லி–10
20–4–72 எஸ்.ஆர். கண்ணன்

## என்ன நியாயம்?

திருச்சி மத்திய நூலகத்தின் புதிய உத்தரவின்படி திருச்சி கிளை நூலகங்கள் முழுதும் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து கல்கி, தினமணி கதிர், தினமலர், இந்தியன் எக்ஸ்பிரஸ் முதலிய பத்திரிகைகள் வாங்குவதை நிறுத்தி விட்டன.

தி. மு. கழகச் சார்புடைய பத்திரிகைகளுக்கு மட்டும் முதலிடம் கொடுத்திருக்கிறார்கள். இந்த லட்சணத்தில் நூலக வரியை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து மூன்று பைசாவாக இருந்ததை ஐந்து பைசாவாக உயர்த்தியிருக்கிறார்கள். நூலக வரியை உயர்த்திப் பத்திரிகையின் எண்ணிக்கையைக் குறைத்தது என்ன நியாயத்திலோ!

முன்பெல்லாம் ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் புத்தகங்களுக்குக் குறையாமல் கிளை நூலகங்களுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். இப்போது நான்கு வருடங்களாகப் புத்தகங்கள் வருவது சுத்தமாக நின்று விட்டது. இப்போது தினசரி, வார, மாதப் பத்திரிகைகளும் மெல்ல மெல்லக் குறைந்துபோய் விட்டன. ஏன் இந்தப் பாரபட்சமான நடவடிக்கை?

குளித்தலை
16–4–72 த. நடராசன்

## இதுதானா பேசுவார்!

ஏப்ரல் 23ந் தேதி நடைபெற்ற திராவிடக் கழகக் கூட்டத்தில் பெரியார் ஈ. வே. ராமசாமி நாயக்கர் பேசும்போது மதிப்புக்குரிய நேருவையும், மகாத்மா காந்தியையும் தற்போதைய பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியையும் கேவலமாகப் பேசினார். மேலும் அவர் பேசும்போது தமிழகத்தின் எதிர்காலம் சிறக்கவேண்டுமானால் நாம் தனியாகப் பிரிந்து செயல்பட வேண்டும். இன்று உலகத்தில் 75 லட்சம் மக்கள் தொகையைக் கொண்ட பிரதேசமெல்லாம் தனி நாடாகத் திகழ்ந்து முன்னேறி வரும்போது ஐந்து கோடி மக்கள் தொகையைக் கொண்ட நாம் (தமிழ் நாடு) ஏன் தனி நாடாகப் பிரிந்து செயல்படக் கூடாது? அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழகத்தை விடுதலை பெறச் செய்ய வேண்டும். அதற்காக நாம் வெள்ளையர்களுடன் போராடி இந்தியாவை மீட்டது போல் இவர்களுடன் போராடத் தயாராக வேண்டும். நமக்குத் தனித் தமிழ் நாடு தேவை. இனிமேல் நாம் யாருக்கும் அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டியதில்லை' என்றெல்லாம் பிரிவினைக்கு வித்தூன்றும் வகையில் பெரியார் பேசினார். தமிழக அரசு இதழான ''தமிழரசு'' பத்திரிகையில் தனித் தமிழ்நாடு கேட்டுக் கட்டுரையே எழுதியவர் இதுவும் பேசுவார் இன்னமும் பேசுவார். மத்திய அரசு, பெரியாரின் பிரிவினைப் போக்கைக் கண்டிக்கும் வகையில் அவர்மீது நடவடிக்கை எடுக்க வேண்டும்.

திண்டுக்கல்,
25–4–72 சி. அருணாசலம்

# மின்னலடிக்கும் வெண்மைக்கே...
# ரின்




ரின் சோப் அல்ல இது. புத்தம் புதுமையான ஒரு சலவை சாதனம்—வில்லை வடிவிலே ஒரு டிடர்ஜெண்ட். சிக்கன மிகுந்த ரின் சோப்பை விட மேலும் அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுத்திடும். திறந்த சோப்புப் பெட்டியிலே ஈரமுலர வைத்துக் கொண்டால் சிறந்த பலன் அளிக்கும் ரின். குடும்பத்திலுள்ள யாவரின் துணிகளிலும் மின்சுடரின் வெண்மை பளிச்சிடவே: ரின்!





**சலவையோ யானையளவு!**
**சோப்பை விட அரை மடங்கு**
**அதிகத் துணிகளை வெளுப்பது ரின்!**



# ‘ஸைக்கோ ஸாரநாதன்’

## 13. வனதேவதை அருவி

**வ**னதேவதைகள் விளையாடும் இடம் என்றால் அது அசாதாரண அழகோடுதான் இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டே ‘ஃபேரி ஃபால்ஸ்’ என்ற அருவியை நோக்கி மெல்ல நடந்து சென்றனர் பத்மநாபனும் அவரது குடும்பத்தினரும்.

விகடப்பயல் தலையில் ஒரு தொப்பியை அணிந்து தோளிலிருந்து ஒரு விளையாட்டுத் துப்பாக்கியையும் தொங்க விட்டுக் கொண்டு ராணுவ நடை போட்டான். வேட்டைக்காரன் என்ற நினைப்பு அவனுக்கு. மலைச் சரிவுகளையும் புதர்கள் அடர்ந்திருந்த பகுதிகளையும் பத்தடிக்கு ஒரு தடவை சுட்டிக் காட்டி, ‘‘எங்கேயாவது புலி பார்த்தால் சொல்லு; ஷூட் பண்ணிடறேன்’’ என்றான்.

பத்மநாபனும் அவனுடைய திருப்திக்காகச் சற்று நேரத்துக்கொரு தடவை பரபரப்படைந்தவர் போல் நடித்து, ‘‘அதோ கரடி! சுடு! சுடு! சீக்கிரம்! மேலே பாய்ஞ்சுடும்!’’ என்று கூறி அவனுக்குச் சமதையாக விளையாடியபடியே சென்றார்.

நீண்ட நேரத்துக்குப் பிறகு அவர்கள் ஃபேரி ஃபால்ஸை அடைந்தார்கள். ரொம்ப தூரம் தான். ஆனால் பேசிக்கொண்டே நிதானமாக நடந்ததாலும் குளிர்ந்த சூழலில் வெய்யில் கதகதப்பாக இருந்ததாலும் சிரமமே தெரியவில்லை, குழந்தைகளுக்குக்கூட. அருவியை நெருங்கிய போது அவர்களுக்கு ரொம்ப ஏமாற்றமாகவே இருந்தது.

‘‘சென்னை கார்ப்பொரேஷன் குழாயில் கூட இன்னும் கொஞ்சம் அதிகமாக ஜலம் வரும்’’ என்றாள் அம்புஜம்.

ஒரு பிரும்மாண்டமான பாறைமீதாக வழிந்து குளமாகத் தேங்கியிருந்தது நீர். அதிகமாக

கி. ராஜேந்திரன்



அருவி கொட்டாததால் இந்நீர் இலை தழைகள் விழுந்து அழுகிக் கறுப்பாகக் காட்சியளித்தது. குளம் நிரம்பி விட்டதால் வழிந்தோடிய நீர் மிக மிகச் சிறிய ஓடையாகச் சலசலத்துச் சென்றது.

''வனதேவதைகள் வளைய வரக்கூடிய இடமாகத் தென்படவில்லையே?'' என்று வருத்தப்பட்டாள் மீனு.

''குட்டிச்சாத்தான் கூட வராது'' என்றாள் அம்புஜம்.

''ஒரு மழை பெய்தால் களை கட்டிவிடும். ஸெகண்ட் ஸீஸனுக்கு வரலாம்'' என்றார் பத்மநாபன்.

''அடடா! நினைச்சுண்டால் கப்பல் மாடல் காரிலே ஏறிண்டு கொடைக்கானலுக்கு வருகிற மாதிரிதான் பேச்சு ஒழியறது.''

''ஏன் அம்புஜம், நாம் வரலாம் என்று சொன்னேனா? ஸெகண்ட் ஸீஸனுக்குத் தண்ணீர் வரலாம் இங்கே என்றேன்!''

மீனு கொல்லென்று சிரிக்க, அம்புஜம் தோளில் தன் முக வாயை இடித்துக் கொண்டாள்.

''அதோ பார் அம்புஜம்! அனசூயா சொக்காய் விளிம்பை அகலமாய் விரித்துப் பிடித்துக் கொண்டு குதிகால்களை உயர்த்தி மெல்ல ஓடுகிறாள், தன்னையே வனதேவதையாக எண்ணிக் கொண்டு! அதைப் பார்த்துச் சந்தோஷப்படேன்! கண்ணெதிரே இருக்கிற வன தேவதையை விட்டு விட்டு இல்லாத குட்டிச் சாத்தானை ஏன் தேடுகிறாய்?''

ஒரு பட்டாம் பூச்சியைப் போல் இங்குமங்கும் பாய்ந்து சுற்றினாள் அனசூயா. அம்புஜமும் பத்மநாபனும் பேச்சு சுவாரசியத்தில் தங்களை மறந்தனர். குளத்தின் விளிம்பில் நின்று, விசு, வாலுடன் கூடிய தவளைக் குஞ்சுகளை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான். மீனு ஒரு பாறையின் மீது ஒய்யாரமாகச் சாய்ந்து மலைச் சிகரங்களைப் பார்த்தபடி மீண்டும் பகற் கனவுகளில் ஆழ்ந்தாள். செஸ் விளையாட்டுக்கு அடுத்தபடி வேறு என்னென்ன விளையாட்டுக்களை அவள் கற்பனை செய்து கொண்டிருந்தாளோ?

திடீரென்று ''என்னை விடு! என்னை விடு!'' என்று அனசூயா கத்துவது கேட்டது.

பத்மநாபன் திடுக்கிட்டுச் சுற்று முற்றும் பார்த்தார். குழந்தையைக் காணோம்! ''அனசூயா! அனசூயா!'' என்று குரல் கொடுத்துக் கொண்டே சத்தம் வந்த திசையை நோக்கித் தலை தெறிக்க ஓடினார்.

ஃபேரி ஃபால்ஸின் இடப்புறத்தில் சென்ற சிறிய பாதையோடு போனபோது அது ஒரு பாறையைச் சுற்றி வளைக்கும் திருப்பத்தில், அமிர்தலிங்கத்தின் கரங்களுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டு அவன் தோள்களை அனசூயா குத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தார் பத்மநாபன். அமிர்தலிங்கம் பெரிதாகச் சிரித்தானே ஒழியப் பிடியைத் தளர்த்தி அவளை இறக்கி விடவில்லை.

பத்மநாபன் வரும் காலடி ஓசை கேட்டதும் இருவரும் திரும்பிப் பார்த்தனர். அனசூயாவின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வடிந்து கொண்டிருந்தது.

''உங்கள் பெண்ணுக்கு எத்தனைக் கெத்தனை அழகு இருக்கோ, அத்தனைக்கத்தனை நெஞ்சழுத்தமும் இருக்கு. ஒரு முத்தம் கொடுன்னா மாட்டாளாம்! ஒரே பிடிவாதம்!'' என்றான் அமிர்தலிங்கம்.

பத்மநாபன் கிட்டத்தில் வந்ததும் அனசூயா பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரமாக அவர் பக்கம் சரிந்தாள். தகப்பனிடம் வந்து சேர்ந்த பிறகும் அவர் தோளில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மலைத் தொடர்ந்தாள். அவள் முதுகைத் தடவிக் கொடுத்தவாறே ''இவ்வளவுதானே! நான் என்னமோ ஏதோன்னு பயந்துட்டேன்'' என்றார் பத்மநாபன்.

''நீங்க பயந்ததிலும் அர்த்தமிருக்கு. ஊரை விட்டு ஊர் வந்திருக்கும்போது குழந்தைகளைத் தனியாக விடக்கூடாது, ஸார். விபரீதமா ஏதாவது நடந்துபோச்சுன்னா அப்புறமாக் கையைப்

பிசைஞ்சுண்டு நிற்கறதிலே என்ன பிர யோசனம்? அதுவும் கொடைக்கான லில் மேடு பள்ளம், ஏரி குளம்னு திரும் பிய பக்கமெல்லாம் ஆபத்துத்தான்.''

''குழந்தை ரொம்பப் பயந்துட்டாள்'' என்றார் பத்மநாபன். அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தவாறே, ''என்ன ஆயிடுத்து அனு? நீ ஸ்வீட்டா இருக்கேன்னு மாமா ஒரு முத்தம் கேட்டா, அதுக்குப் போய் இப்படி விசும்பி விசும்பி அழணுமா?'' என்று ஆசுவாசப்படுத்தினார்.

''ஒருவேளை என் தாடியைப் பார்த்துப் பயந்துட்டாளோ என்னவோ?'' என்றான் அமிர்தலிங்கம்.

''அது சரி, என்ன இப்படி ஏகாந்தமாக உட்கார்ந்திருக்கீங்க?''

''தனிமையில் ஓர் இனிமை இருக்கத் தானே செய்யிறது? நாவலாசிரியரான உங்களுக்கு இதை நான் சொல்லியா தர வேண்டும்?''

''உங்கள் தனிமையை நான்தான் வந்து கெடுத்துட்டேன்.''

''நோ நோ யூ ஆர் வெல்கம். எங்கே உங்க ஃபிரெண்டு டி.ஐ.ஜி? உங்க பின்னோடு வரலையா?''

''ஸி.ஐ.டி.க்கும் ஜர்னலிஸ்டுக்கும் ஏது ஸார் ஓய்வு? அவர் வீவிலே வந்திருந்தாலும் லோக்கல் போலீஸ் உதவிக்கு அழைத்தால் போகாமலிருக்க மனசு இடம் தராது. அதே மாதிரிதான் நானும். இங்கே சந்திக்கிற மனிதர்கள், பார்க்கிற காட்சிகள் சம்பாஷணைகள் எல்லாம் மனத்தில் பதிந்துவிடுகின்றன. பின்னால் கொடைக்கானல் பற்றி நாவலோ கட்டுரையோ எழுதும் போது இந்த அனுபவங்கள் பயன் படுகின்றன. அந்த விதத்தில் பார்க்கும்போது இதை எனக்கு விடுமுறை என்று கருதவா முடியும்?''

''அம்மா கிட்டே போகலாம், அப்பா!'' என்றாள் அனசூயா.

''அப்புறம் சந்திக்கிறேன், ஸார்!'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினார் பத்மநாபன்.

''இதோ நானும் வந்து விட்டேன்'' என்று கூறித் தரையில் விரித்திருந்த துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பினான் அமிர்தலிங்கம்.

அனசூயாவைக் கீழே இறக்கி நடத்தி அழைத்துக் கொண்டு திரும்பியபோது எதிரே அம்புஜம் விகவைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு பரபரப்புடன் வருவதைப் பார்த்தார் பத்மநாபன். . தொலைவில் இருந்தபடியே, ''ஒன்றுமில்லை, கலவரப் படாதே'' என்று கத்தி அவள் துரித நடைக்குத் தடை விதித்துச் சிரமத்தைக் குறைத்தார்.

நிதானமாக எல்லாரும் ஃபேரி ஃபால்ஸைத் திரும்பவும் அடைந்தபோது அதற்குள் அங்கே டி. ஐ. ஜி. நடராஜனும் ரங்கனும் வந்திருக்கக் கண்டனர். மீனுவுக்கருகே ஒரு பாறைமீது அவர்கள் அமர்ந்திருக்க மூவரையும் வெய்யில் கும்மாளமாகக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தது.

''என்ன ஸார், அஃபிஷியல் ஓர்க்கிலிருந்து ஓய்வு கிடைத்ததா?'' என்றார் பத்மநாபன்.

''ஏதோ ஒரு மாதிரி சற்று விடுவிச்சுக்கிட்டு வந்தேன்.''

''இப்போதான் அமிர்தலிங்கத்திடம் சொல்லிண்டிருந்தேன். பத்திரிகையாளருக்கும் போலீஸ்காரருக்கும் ஓய்வு ஏதுன்னு... இரண்டு நாளா சிரமப்படறேளே, குற்றவாளியைக் கண்டு பிடிச்சேளா இல்லையா?''

''குற்றவாளியா? குற்றம் நடந்திருக்கிறது என்று நிரூபணம் ஆனால் அல்லவோ குற்றவாளியைக் கண்டுபிடிக்கிற பிரச்னை எழும்?''

''அப்படின்னா தீர்க்க தரிசனப் பாறைக்கு வந்த பிறகும் கூடக் கண் தெரியாமல்தான் அவன் கீழே விழுந்து விட்டான் என்கிறீர்களா?''

''நீங்க சொல்கிற மாதிரி அது யதேச்சையாக நடந்துவிட்ட ஒரு விபத்தாக இருக்கலாம்; அல்லது தற்கொலையாகவும் இருக்கலாம்.''

''இல்லாத போனால் யாராவது அவனைத் தள்ளி விட்டு விட்டு உங்ககிட்டே பிடிபடாமல் தப்பிச்சுக்கிட்டும் இருக்கலாம்'' என்றான் அமிர்தலிங்கம்.

''அதுவும் சாத்தியம்தான்'' என்று டி. ஐ. ஜி. தலையாட்டினார்.

''சரிதான், உங்களுடன் பழகிய தோஷத்தால்தான் தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மையையே சிருஷ்டித்திருப்பாரோன்னு நினைக்கும்படி பேச றீங்களே!''

''வேறே எந்த விதமாகப் பேசச் சொல்றீங்க மிஸ்டர் பத்மநாபன்?'' என்று இலேசாகக் கடுமை தொனிக்கக் கேட்டார் நடராஜன். பிறகு அமிர்தலிங்கத்தைச் சுட்டிக் காட்டி, ''இதோ இவரையும் சேர்த்து மொத்தம் இருபத்திரண்டு சுற்றுலாப் பயணிகள் அந்தப் பக்கம் உலாத்திக் கொண்டிருந்திருக்கிறார்கள். யார் பேரிலேன்னு சந்தேகப்படறது?'' என்று கேட்டார்.

''நீங்க எதுக்கு அங்கே போய்ச் சேர்ந்தீங்க?'' என்று அமிர்தலிங்கத்தை வினவினார் பத்மநாபன்.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | | தங்கும் இடம் |
|---|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை | 9-00 -- 10-00 | மணி மெடிகல் மார்ட், மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை | 3-00 -- 5-00 | பாம்பே நூல் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை | 8-00 -- 9-30 | Dr. மகாதேவ அய்யர் வீடு, மேல ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை | 3-00 -- 5-00 | சண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை | 9-00 -- 10-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை | 10-30 -- 11-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை | 3-30 -- 5-00 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை | 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை | 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை | 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை | 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை | 3 - 5 | |
| ,, செவ். பேட்டை. | 16 | மாலை | 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை | 10-00 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை | 3-30 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை | 9-00 -- 11-00 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை | 3-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சீபுரம் | 19 | காலை | 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை | 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை | 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை | 3-00 -- 5-00 | P. L. R. அண்டு கோ., தெப்பக்குளம், மயிலாப்பூர். |
| செங்கல்பட்டு | 21 | காலை | 10-00 -- 11 00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை | 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை | 5-00 -- 6-00 | மீனாட்சி டுபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை | 8-30 -- 10-00 | பாரத் மெடிகல் எம்போரியம், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை | 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ணா மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை | 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேப்பியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை | 7-00 -- 11-30 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், திபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை | 3-00 -- 4-00 | பாரதீய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோவில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை | 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை | 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை | 11-00 -- 12-00 | வாணி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை | 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை | 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| | | மாலை | 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-II, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87) திருச்சி ஜில்லா

''நான் கால்ஃப் ஆடிப் பழகினே லில்லையா? கலீப்பா யிருந்தது. கிளப் கட்டட வாசலில் பிரம்பு நாற்காலி களும் மேஜைகளும் போட்டிருந்தாங்க. கலர் கலரா பெரிய குடையும் விரிச்சு வைச்சிருந்தாங்க.''

''உலகையே ஒரு குடை நிழலின் கீழ் ஆளவேண்டும் என்று எத்தனையோ மன்னர்களும் சர்வாதிகாரிகளும் முயன்றிருக்கிறார்கள்; நீங்கள் ஒரு குடை நிழலையாவது ஆளலாமென்னு அங்கே போய் உட்கார்ந்தீங்களாக்கும்!''

சிரிப்பு ஓய்ந்ததும் அமிர்தலிங்கம் தொடர்ந்தான்: ''ஒரு கோக் கொண்டு வரச் சொல்லி உறிஞ்சிக்கிட்டிருந்தேன். அப்போ ஒரு பட்டாளம் ஸலுயிஸைட் பாய்ண்டைப் பார்த்துவிட்டுத் திரும்பி இந்தப் பக்கம் மலை ஏறிச்சு. என்னவோ மேலே போறாங்களே, அந்தப் பாதை எங்கே கொண்டு போய் விடுகிறதுன்னு பார்ப்போமேன்னு நானும் கிளம்பி அவங்களோடு சேர்ந்துக்கிட்டேன். பத்தடி நடந்திருப்போம். 'வீல்'னு ஒரு சத்தம். எல்லோரும் விழுந்தடிச்சு ஓடினோம். அந்த விளிம்பிலே யிருந்து எட்டிப் பார்த்தோம். அதள பாதாளத்திலே ஒரு மனுஷன் குப்புற விழுந்து கிடந்தான்!....''

''இவர் இப்படிச் சொல்றார். ஆனால் மற்ற சுற்றுலாப் பயணிகள், 'இவர் யாரோ புது ஆசாமி எங்களுக்குத் தெரியாது; இவர் எங்களோடு வந்து சேர்ந்துக்கிட்டதாகச் சொல்கிறாரே ஒழிய நாங்கள் இவரைக் கவனிக்கலே; நாங்க பாட்டுக்கு எங்களுக்கிடையில் பரிகாசமாப் பேசிச் சிரிச்சுக்கிட்டுப் போனோம்; அப்போ 'வீல்'னு சத்தம் கேட்டது; மேலே ஓடிப் போய்ப் பார்த்தோம்' அப்படீங்கறாங்க. ஆனால் அதனாலே இவருக்கு ஒண்ணும் நஷ்டம் இல்லே. இறந்து போன தினகரனைக் கொல்வதற்கு இவருக்குக் காரணம் ஒண்ணுமில்லையே? அவனுக்கும் இவருக்குமிடையில் எந்த விதமான சம்பந்தமோ தொடர்போ கிடையாதே.''

''இறந்துபோனது யாருன்னு சொன்னீங்க? தினகரனா? அவனைப் பற்றி வேறு ஏதாவது விவரம் தெரிந்ததா?''

''தெரியாமல் என்ன? சர்க்கிள் இன்ஸ்பெக்டர்கிட்டே யிருந்து எனக்குத் தகவல் கிடைத்து நான் போவதற்குள் இருட்டி விட்டது. ஆனாலும் ஜீப்பிலிருந்த சர்ச் லைட்டுக்கு நீளமான ஒயர் கனெக்ட் பண்ணி வெளிச்சம் போட்டுப் பார்த்தேன். அப்புறம் போலீஸ்காரர் ஒருவருக்குத் தைரியம் சொல்லி அவர் தோளிலும் இடுப்பிலும் கயிற்றைக் கட்டிப் பிடிச்சுக்கிட்டு மெல்ல இறக்



கினோம். இந்தப் போலீஸ்காரர்தான் கால்ஃப் கிளப் பக்கம் அன்று டியூட்டியில் இருந்தவர். உயரே போனவர்கள் பரபரப்புடன் திரும்பி வந்து விவரம் சொன்னதும் இன்ஸ்பெக்டருக்குக் கிளப்பிலிருந்தே ஃபோன் செய்தவர் இவர் தான். கெட்டிக்காரர். பஸ் ஏறி நழுவி விடப் பார்த்த சுற்றுலாப் பயணிகளை விசாரணை முடியறதுக்கு முன்னாடி கிளம்பக் கூடாதுன்னு தடுத்து நிறுத்திட்டார்...''

இச்சமயத்தில் விசுப் பயல் பத்மநாபனின் மடிமீது ஏறி அவர் காதோடு ஏதோ கிசுகிசுத்தான். ''சரி, சரி! அக்காவைக் கேட்டு வாங்கிக்கோ'' என்றார் அவர், இடையூறினைப் பொறுக்க மாட்டாதவராக. ''மீனு! குழந்தை பிஸ்கட் கேட்கிறானே, எடுத்துத் தரப்படாதா? சாப்பிடத்தானே கொண்டு வந்தேன், இல்லே திருப்பி எடுத்துப் போகவா?'' என்று சற்றுக் கடுமையாகவே பேசினார்.

''இங்கே வாடா கண்ணு! நான் தரேன்; அப்பாவைத் தொந்தரவு பண்ணாதே'' என்று கூறி ஏக்கத்துடன் தகப்பனார் மடியை விட்டு இறங்கிய மகனை இழுத்து அணைத்துக் கொண்டாள் அம்புஜம்.

''கான்ஸ்டபிள் இடுப்பிலே கயிற்றைக் கட்டி இறக்கினீர்கள்... பிறகு?'' —பத்மநாபன் கேட்டார்.

''கீழே இறந்து கிடந்தானே அவனை மறுநாள் பகலில்தான் மேலே கொண்டு வரமுடியும் என்பது நிச்சயமாகி விட்டதால் அப்போதைக்கு அவன் பாக்கெட்டுகளை மட்டும் பரிசோதிக்கச் சொன்னேன்.''

''என்ன கிடைச்சுது?''

''ஒரு பர்ஸ், ஒரு டயரி இரண்டும். பர்ஸில் கொஞ்சம் பணம், மணிக்கைக் கடை பில் இவை தவிர வேறு ஒண்ணும் இல்லே. டயரியில் பெயர், வீட்டு விலாசம், ஆபீஸ் விலாசம் இரண்டும் இருந்தன. ஆனால் டயரி எழுதும் பழக்கம் அவனுக்கு இல்லே. ஏதோ சில ஞாபகக் குறிப்புகள், வண்ணான் கணக்குப் போன்றவற்றைத்தான் டயரியில் எழுதியிருந்தான்.''

''இவ்வளவுதானு?'' என்று ஏமாற்றத்துடன் வினவிய பத்மநாபன், ''ஆனல் அதில் கேள்விக் குறி எழுப்பிய ஒரு விஷயத்தையும் நான் கவனித்தேன்'' என்று டி. ஐ. ஜி. கூறியதும் மீண்டும் உற்சாகம் அடைந்தவராக நிமிர்ந்தார்.

''டயரியில் ஒரு தாள் கிழிக்கப்பட்டிருந்தது'' என்ருர் டி. ஐ. ஜி.

''அதிலிருந்து என்ன ஊகிக்கிறீர்கள்?''

''ஊகத்துக்கென்ன? எத்தனை விதமான ஊகங்களுக்கு அது இடமளிக்கும் என்பது நாவலாசிரியரான உங்களுக்குத் தெரியும். யாராவது ஒரு நண்பனுக்கு அவன் தன் விலாசத்தை எழுதிக் கிழித்துக் கொடுத்திருக்கலாம். அல்லது அவன் எழுதி வைத்திருந்த ஏதோ ஒரு விஷயம் பிறர் கண்ணில் படக் கூடாது என்பதற்காக அதில் அக்கறை கொண்டுள்ள யாரோ ஒருவர் அவனுக்குத் தெரிந்தோ தெரியாமலோ அதைக் கிழித்துப் போட்டிருக்கலாம். ஆனல் ஊகங்களால் யாதொரு பயனுமில்லை. கோர்ட்டில் சாட்சியங்களைத்தான் சமர்ப்பிக்க வேண்டும், ஊகங்களை அல்ல.''

மீனு பிஸ்கட் பொட்டலத்தைப் பிரித்திருந்தாள். கரகரப்பான மொனகோ உப்புப் பிஸ்கட். விருந்துண்டவனுக்குக் கூட நாவில் ஜலம் ஊறும் அதைப் பார்த்தால். இவர்களுக்கோ நடந்து வந்த களைப்பு. பத்மநாபன் எப்போது கை நீட்டலாம் என்பதைக் கணிக்க விழிகளைக் கன்னேரத்துக்குச் செலுத்தினர். ஆவலுடன் காத்திருக்கும் விசுவைக் கூட அலட்சியம் செய்துவிட்டு முதன் முதலில் நாலு பிஸ்கட்களை எடுத்து மீனு ரங்கன் கரத்தில் வைப்பதை அவர் கவனித்தார். அப்போது அவள், தன் விரல்கள் அவனது உள்ளங் கையில் படாதவாறே சுலபமாகக் கொடுத்திருக்கலாம். ஆனல் அவள் அவ்வாறு செய்யவில்லை. தேவைக்கு அதிகமாகவே அவள் விரல்கள் அங்கே உறவாடிக் கொண்டிருந்தன. அவள் கண்கள் சவால் விடுவது போல் அவன் முகத்தை ஏறிட்டு நோக்கின. உண்மையில் ரங்கன்தான் சற்றுக் கூச்சப்பட்டு முகம் குனிந்தான். 'அவள் கல்லூரித் தோழிகள் வர்ணிப்பது போல் பாரசீகப் பூனைதான் என் மகள்; ஆனல் பாய்ந்தால் புலி!' என்று தமக்குள் நினைத்துக் கொண்டார் பத்மநாபன். தாயும் தந்தையும் கதை கேட்கும் சுவாரசியத்தில் தன்னைக் கண்காணிக்க மாட்டார்கள் என்று எண்ணிக் கொண்டாளா இவள்? 'அம்புஜம்! இதைக் கவனித்தாயா?' என்று ஜாடைகாட்ட நினைத்துப் பத்மநாபன் தம் மனைவி பக்கம் திரும்பினர். அவளும் தன் மகளின் போக்கைக் கவனியாதது போல் கவனித்து வருவதைக் கண்டு கொண்டார். சரி, அப்புறம் பேசிக் கொள்ளலாம் எனத் தீர்மானித்தவராய் அவர் மீண்டும் டி. ஐ. ஜி.யை ஏறிட்டு நோக்கினர்.

''இறந்து போனவன் பெயர் தினகரன் என்பதும் அவன் விலாசமும் தெரிந்த பிறகு அத்தருணத்தில் அந்தப் பக்கம் இருந்த சுற்றுலாப் பயணிகள் அனைவரையும் விசாரித்திருப்பீர்கள். எல்லோரும் ஒரு முகமாகத் தினகரன் என்ற பெயர் கொண்ட யாரையும் எங்களுக்குத் தெரியாது என்று சொல்லியிருப்பார்கள். 'அப்படியானல் சரி' என்று எல்லாரையும் பஸ்ஸில் ஏற்றி அனுப்பி விட்டீர்களாக்கும்.''

''எல்லோரையும் பஸ் ஏற்றி அனுப்பியது என்னவோ வாஸ்தவம்தான். ஆனல் அவர்களில் சிலர் தினகரனை எங்களுக்கு நன்ருகத் தெரியும் என்று தான் சொன்னர்கள்!''

''என்ன? என்ன? அப்படி ஒப்புக் கொண்டவர்களையுமா அனுப்பிட்டீங்க?''

''ஆமாம். விலாசத்தை மட்டும் குறித்துக் கொண்டேன். கேஸ் ஜோடிப்பது என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அப்படி ஜோடிப்பதற்குக் கூட வகையாக ஒரு விஷயமும் அகப்படவில்லை. நான் என்ன செய்ய?''

''தினகரனை அவர்களுக்கு எப்படித் தெரியுமாம்?''

''கணவனை மனைவிக்குத் தெரியாதா?''

''என்னது? சுற்றுலாப் பயணிகளில் தினகரனின் மனைவியும் ஒருத்தியா?''

''ஆமாம்; தினகரன் என்ற பெயரையும் விலாசத்தையும் சொன்ன உடனே நன்ருக ஒப்பாரி வைத்துப் பலமாக அழுதாள். கணவன் இறந்து விட்டானே என்றுகூட அவளுக்குக் கவலை இல்லை. விதவை என்ற ஒரு சொல் தன்னிடம் வந்து ஒட்டிக் கொண்டு விட்ட அருவருப்புத்தான் அவளுக்கு அதிகமாக இருந்ததாகத் தோன்றியது.''

''அதாவது கணவன் மனைவியிடம் சுமுகமான உறவு இல்லை!'' என்று கூறியபடியே தம் கரத்துக்கு வந்து சேர்ந்த பிஸ்கட்டைச் சுவைத்தார் பத்மநாபன். கதையும் சுவையாகத் தான் இருந்தது அவருக்கு.

''ஆமாம், விசாரணையின்போது அவன் நடத்தை கெட்டவன் என்பது புரிந்தது. தினகரன் மனம் நொந்து போய்த் தன் வீட்டிலிருந்து கிளம்பி

# கோடை அசதியை நொடிப் பொழுதில் விரட்டுவது க்ளாக்ஸோஸ்-D®



**அருந்துவீர் க்ளாக்ஸோஸ்-D.**
**அருந்துவதற்கினிய வழிகள்பல.**

கோடைச் சூடு ஏற ஏற, வாடிச் சோர்ந்து விடுகிறீர்கள் விரைவிலே, தெம்பு போன இடமே தெரிவதில்லை.

எடுத்திடுவீர் குளுமையூட்டும் க்ளாக்ஸோஸ்-D. இனிதே கலந்திடுவீர் ஒரு தம்ளரிலே இரண்டு ஸ்பூன்கள்.

அருந்தும்போதே, அடடா, புதுத் தெம்பு துடித்தெழ வைக்குது க்ளாக்ஸோஸ்-D, கோடைப் பொழுதிலே.

அதுவன்றோ உச்சிகுளிரும் உணர்வு.



குடிநீரிலே



நேரடியாக வாயிலே



எலுமிச்சம் சாற்றிலே



காப்பியிலோ, தேநீரிலோ

# இலவசம்!

ரூ. 1.25 பெறுமானமுள்ள

**3-தம்ளர் அடுக்கு ஸெட்:**

ஒவ்வொரு 700 கிராம் **க்ளாக்ஸோஸ்-D** டப்பாவுடனும் கிடைக்கும்.

**முந்துங்கள்! சரக்குகள் இருப்பிலுள்ள வரையே சலுகை!**





**ஊக்க சக்தி உடனடி: அதற்கே**
**க்ளாக்ஸோஸ்-D**

dCP/GL/27 tam

வந்திருக்கிறான், கொடைக்கானலுக்கு. அவன் இங்குதான் வந்திருக்கிறான் என்று தெரியாமலே இவளும் அவன் வீட்டை விட்டுப் போன இரண்டாம் நாள் தன் காரியாலய சக ஊழியர்கள் சிலருடன் இந்தச் சுற்றுலாக் கோஷ்டியில் சேர்ந்து புறப்பட்டு வந்திருக்கிறாள்.''

''அட கிராதகி!'' — இதுவரை மௌனமாக எல்லாவற்றையும் கேட்டு வந்த அம்புஜம் இப்போது பொறுக்க முடியாமல் இடைமறித்துக் கூறினாள்: ''அகமுடையானைத் துரத்தி அடித்த கையோடு இவளுக்குச் சுற்றுலா வேறு கேடா?''

''அவளுடன் வந்த ஆபீஸ் சகாக்கள் அனைவருக்கும் அவள் கணவன் தினகரனைத் தெரியும். அவர்களில் ஒருவர் பெரிய அதிகாரி. இப்போது அவளுடன் சிநேகமாக இருப்பது அவர்தான். அவருக்கு முன்னால் எத்தனையோ.''

''கொலை செய்ததன் நோக்கம், காரணம் என்று தேடி அலைஞ்சிங்களே ஸார்! இங்கே இருக்கே காரணம் — அழகா, ஸ்பஷ்டமா உள்ளங்கை நெல்லிக் கனி போல. தன் உல்லாச வாழ்க்கைக்கு இடையூறு செய்யும் கணவனைத் தீர்த்துக் கட்ட நினைத்திருக்கலாம். அல்லது அவள் காதலன் — அந்த அதிகாரி—தினகரனை ஒழித்துவிட எண்ணியிருக்கலாம் இல்லையா?''

''மோடிவ் இருக்கு....'' — நீதிமன்ற வார்த்தையைப் பயன்படுத்தினார் நடராஜன். ''ஆனால் சாட்சியம் இல்லையே? சுற்றுலாப் பயணிகள் 'வீல்'னு சத்தம் கேட்டதும் ஓட்டமும் நடையுமாகச் சென்று, பாதாளத்தில் விழுந்து செத்துக் கிடக்கும் ஒருவனைப் பார்த்து விட்டுப் பரபரப்புடன் திரும்பிக் கீழே இறங்கி வந்த சமயம், அப்போதுதான் இந்தக் காதலர்கள் இருவரும் மெல்ல ஹில்டாப் ரோட்டில் ஏற ஆரம்பிப்பதைக் கண்டார்கள். 'என்ன ஆச்சு? எதுக்கு இப்படிப் பேயைக் கண்ட மாதிரி ஓடி வரீங்க' என்று இவ்விருவரும் கேட்டதற்கு அவர்கள் 'ஒரு துர்மரணம் நேர்ந்து விட்டது' என்று சொல்லியிருக்கிறார்கள்.''

''ஆகமொத்தம் தினகரனின் மனைவியும் அவள் ஆசைநாயகனும் ஹில்டாப் ரோட்டில் ஏறவேயில்லை? ராக் ஆஃப் விஷனைப் பார்க்கவேயில்லை?''

''சாட்சியங்கள் அந்த முடிவுக்குத் தான் நம்மை வரச் செய்கின்றன. மற்றவர்கள் கீழே — கால்ஃப் கிளப் அருகே ஸைட்ஸீயிங் பாயிண்ட்டைப் பார்த்து முடிவதற்கு முன்பாகவே இவர்கள் மெல்லத் தனியே பிரிந்து விட்டார்களாம். கொடைக்கானல் டவுனுக்குப் போகும் பிரதான சாலையில் கைகோத்தபடி காலாற நடந்தார்களாம். நண்பர்களுடன் திரும்பவும் சேர்ந்துகொள்ள வந்த போது சுற்றுலாக் கும்பல் ராக் ஆஃப் விஷனிலிருந்து அவசரம் அவசரமாய் இறங்கி வருவதைக் கண்டார்களாம். காதலர்கள் — கள்ளக் காதல்தான் என்றாலும் — சற்று நேரம் தனித்து உலாவி விட்டு வர ஆசைப்பட்டதில் வியப்பில்லையே?''

''கள்ளக் காதலா இது? பகிரங்கப் பச்சைக் காதல் என்று சொல்லுங்கள்!'' என்றார் பத்மநாபன் அருவருப்புடன். ''நீங்கள் அவளைச் சும்மா விட்டிருக்கக் கூடாது.''

''மிஸ்டர் பத்மநாபன்! என்னை நம்புங்கள். ஒரு சின்ன சாட்சியம் கிடைத்திருந்தாலும் அவளைப் பிடித்து லாக் அப்பில் தள்ளி சந்தோஷப்பட்டிருப்பேன். ஆனால் அமிர்தலிங்கம் உட்பட மொத்தம் இருபது பேர் சொல்கிற சாட்சியத்துக்கு எதிராக நான் என்ன செய்ய முடியும்?''

''இந்த மாதிரி நீங்கள் சாட்சியம் இல்லேன்னு எல்லாரையும் அனுப்பி விடப் போக ஊரிலே எப்படியெல்லாம் வதந்தி பரவி விடுகிறது, பார்த்தீங்களா?''

''வதந்தியா, என்ன வதந்தி? என் காதுக்கு ஒண்ணும் எட்டவில்லையே?''

''உங்க காதிலே படுகிற மாதிரி பேச வாங்களா? டி. ஐ. ஜி. என்றால் பயமாயிராதா? ஆனால் நேற்று நாங்கள் எல்லாருமே ஏரிக் கரையில் படகுக்காகக் காத்திருந்தபோது அந்தப் பேச்சு அடிபடுவதைத் தெளிவாகக் கேட்டோம்.''

''எந்தப் பேச்சு? என்ன கேள்விப் பட்டீர்கள்?''

பத்மநாபன் சற்றுத் தயங்குவது போல் காணப்பட்டார். வதந்தியைப் பரப்புவது தமக்கு அழகா என யோசித்தாரோ என்னவோ? ஆனால் அம்புஜம் வார்த்தைகளைச் சீன வெடிக் கட்டாக வெடித்தாள்: ''வடக்கே போலீஸ் பாதுகாப்பி லிருந்து தப்பித்துக் கொண்ட ஸைக்கோ ஸாரநாதன் கொடைக்கானலுக்கு வந்து விட்டானாம். ராக் ஆஃப் விஷன் அருகே தினகரன் விபத்தில் இறக்கவில்லையாம். ஸைக்கோவின் வேலை தானாம் அது!''

இதைக் கேட்டுவிட்டுப் பெரிதாகச் சிரித்தார் டி.ஐ.ஜி. ''நான்ஸென்ஸ்!'' என்று கூறிவிட்டு மீண்டும் சிரித்தார். அமிர்தலிங்கமும் அவர் சிரிப்பில் சேர்ந்து கொண்டு அட்டகாசமாக நகைத்தான். (தொடரும்)

# வயிற்றுக் கோளாறு?

வாயுவா?
அமில உபாதையா?
நெஞ்செரிச்சலா?
அஜீரணமா?





**2 ரென்னி மாத்திரைகளை**
**மெல்லுங்கள்...**
**விரைவிலேயே**
**நிவாரணம் பெற**




நிக்கோலஸ் (N) தயாரிப்பு

mcm/nl/4 tam



# மோர்க்குழம்பு

## வ. சா. நாகராஜன்

● பல ஆண்டுகளுக்கு முன்னர் ஒருதடவை எழுத்தாளர் மகாநாடு நடந்தது. பேராசிரியர் 'கல்கி' அவர்களும், பேராசிரியர் அ. சீ. ரா. அவர்களும் போட்டி போட்டுக் கொண்டதைப் போல் நகைச்சுவைக்கே இலக்கணமாகச் சொற்பொழிவாற்றினார்கள்.

● அ. சீநிவாசராகவன் அவர்கள் தமது பேச்சினிடையே குறிப்பிட்டார்கள்: "இப்போது வரும் கதைகளில் ஆழமே இருப்பதில்லை. என்னென்னவோ எழுதுகிறார்கள். 'மோர்க் குழம்பு' என்ற தலைப்பில்கூட எழுதுவார்கள் போலிருக்கிறது!"

சேது சிறு வயதில் தாயை இழந்தவன். அத்தையின் பரிவில் வளர்ந்தவன். அத்தைக்கும் அன்பு வைக்க இவ்வுலகில் இரண்டே ஜீவன்கள்தாம் இருந்தன. ஒன்று சேது, மற்றொன்று படியளக்கும் எருமை மாடு.

மாடு தாராளமாகப் பால் கறக்கும். வியாபாரத்துக்குப் போக மோர் மிஞ்சும். அதனால் அநேகமாகத் தினந்தோறும் மோர்க்குழம்புதான் சாப்பாட்டில் பிரதானமான அம்சம்.

இப்படியாகச் சின்னஞ் சிறு வயதில், அறியாப் பருவத்தில் மோர்க் குழம்பின்மீது காதல் கொள்ள ஆரம்பித்தான் சேது.

பள்ளியில் படித்த காலத்தில் மோர்க் குழம்பு இருமுறை சேதுவின் வாழ்க்கையில் ஆழமான வடுவை ஏற்படுத்தி விட்டது. முதல் தடவை அவன் ஒன்பதாவது படிக்கும்போது. மோர்க் குழம்பின் மகத்துவத்தைப் புரிந்து கொள்ளும் மனப் பக்குவம் பெற்று வந்த ஆரம்ப காலம். காலையில் பழைய சோற்றைப் போட்டுவிட்டுப் பிற்பகல் வேளைக்கு டிபன்பாக்ஸில் மோர்க் குழம்பு சாதத்தைக் கொடுத்து அனுப்புவாள் அத்தை. காரசாரமாகக் கிடைக்கும் மோர்க் குழம்பில் சேது உயிரை வைத்ததில் வியப்பில்லை.

அந்த நாட்களில் ஒரு நாள்.

நான்காவது பீரியட். மணி பன்னிரண்டரை. காலையில் பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பும் அவசரத்தில் அரைகுறையாகச் சாப்பிட்டுவிட்டு வந்த சேதுவுக்குப் பசி வயிற்றைக் கிள்ள ஆரம்பிக்கும் வேளை. டெஸ்க் மறைவில் வைத்திருந்த டிபன்பாக்ஸின் மூடியில் உள்ள சின்ன இடைவெளி வழியாக மோர்க் குழம்பின் மணம் 'கம்' என்று எழுந்து சேதுவைத் தீண்டும் நிர்ப்பந்தம். சேது பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். சரித்திர வாத்தியார் சாமிதுரை. இரண்டாவது மகாயுத்தத்தில் போலந்து வீழ்ச்சியில் ஆரம்பித்து ஒவ்வொரு தேசத்தின் வீழ்ச்சியாக வர்ணித்துக் கொண்டே போனார். கடைசி பெஞ்சில் உட்கார்ந்திருந்ததால் அவர் பார்வை சேதுவின்மீது முழுமையாக விழுவதற்கு நியாயம் இல்லை. மெதுவாக டெஸ்கினுள் கைவிட்டு டிபன்பாக்சைத் திறந்தான். மல்லிகைக்கும் ரோஜாவுக்கும் பாரிஸ் சென்டுக்கும் இந்த மண கமகம் உண்டா? சேது இறங்கிப் போனான். மெதுவாக ஓர் உருண்டை எடுத்துப் பிரசித்தி பெற்ற அரசியல்வாதிகள் மேடையில் பொடி போடும் லாகவத்துடன், அடுத்த பையனின் கவனத்தைக்கூடக் கவராமல் வாய்க்குள் செலுத்தி விட்டான். பிறகு கிளம்பியது பிரச்னை. அப்படியே மருந்தை

விழுங்குவது போல் விழுங்கினால் மோர்க் குழம்பின் மணம் எப்படிப் பூரணமாகும்? நாக்கு மெதுவாகச் சுழல ஆரம்பித்தது. வாய் மந்திர கதியில் அசைந்தது.

சேது சொர்க்கத்தில் மிதக்கத் தொடங்கினான்.

அடுத்த உருண்டை. அடுத்த உருண்...

''சேது! இரண்டாவது உலகப் போரை முடிவுக்குக் கொண்டுவர அமெரிக்கர்கள் உபயோகித்த குண்டின் பெயர் என்ன?''

''மோர்க் குழம்பு சார்.''

அத்தனை பையன்களிடமிருந்தும் 'கொல்' என்ற சிரிப்பு எழுந்தது. அதன் பிறகுதான் சேதுவுக்குச் சுய நினைவு வந்தது. ஆசிரியர் ''உன் வாயில் என்ன?'' என்ற கேள்வியைக் கேட்கவில்லை என்று உணர்ந்தான். சமாளித்துக் கொண்டு ''இல்லை சார், துப்பாக்கி, கன்... குண்டு...!'' என்று தவித்தான்.

சரித்திர ஆசிரியர் கிட்டத்தட்ட ஒரு ஹைட்ரஜன் குண்டையே சேதுவின் உடலில் செலுத்தினார். 'மோர்க் குழம்பு சேது' என்ற பெயர் அன்றிலிருந்து அவனுக்கு நிலைத்தது.

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு ஒருநாள். மாதாந்திரப் பரீட்சை. நடுப் பகல். அதே பசி நேரம்.

கேள்விகளில் அநேகமாக எல்லாவற்றுக்கும் விடை எழுதிவிட்டான். ஒரே ஒரு கேள்விதான் பாக்கி. இன்னும் அரை மணி நேரம் இருந்தது. திடீரென்று சேதுவுக்கு மோர்க் குழம்பின் நினைவு எழுந்தது. அப்போது அவன் அனுபவித்த உணர்ச்சியை இரண்டு வகையினர்தான் புரிந்து கொள்ள முடியும்.

சிகரெட் பழக்கத்துக்கு அடிமையாகி, சேர்ந்தாற்போல் எழு எட்டு மணி நேரம் புகை பிடிக்க முடியாமல் தவித்துப் போய் ஒரே ஓர் இழுப்புக்காகத் தவிப்பவர். மற்





“தவணை முறையில் எந்தப் பொருளையும் நாங்கள் ‘சப்ளை’ செய்கிறோம்.”

“அவர் யார்?”

“அந்தத் தவணைப் பணம் கட்ட உங்களுக்குத் தவணை முறையில் கடன் தருபவர்!”

ஒருவர். ஐந்து நிமிஷங்களுக்கு ஒரு முறை நாசிக்குப் பொடியை நிவேதித்துப் பழக்கமாகி, சேர்ந்தாற்போல் ஐந்தாறு மணி நேரத்துக்கு மேல் பொடி போட முடியாத நிர்ப்பந்தத்துக்கு ஆளாகித் தவிக்க நேரிடும் சூரணதாசர்.

சேது மனத்தை அடக்க முயற்சி செய்தான். முன் அனுபவத்துக்குப் பிறகு வகுப்பறையில் டிபன்பாக்ஸைத் திறப்பதேயில்லை. இப்போது மனம் கட்டுப்படாமல் தன்னிச்சையில் வெறி கொள்ள ஆரம்பித்தது. வகுப்பறையைச் சூபர்வைஸ் செய்து கொண்டிருந்த ஆசிரியர் அறையின் வாசல் பக்கத்திலிருந்து ஜன்னல்வரை நடந்து கொண்டிருந்தார். ஒன்று, இரண்டு, மூன்று... பத்து அடிகள். திரும்பி அதே கதியில் திரும்பும் போதும் சரியாகப் பத்து அடிகள். மீண்டும் வாசல் பக்கத்திலிருந்து ஜன்னலை நோக்கி. நான்காவது தடவை... ஐந்தாவது தடவை.

சேது, எழுதி முடித்த விடைத் தாளை ஒரு நோட்டம் விட்டு விட்டு ஆசிரியரைப் பார்த்தான். அவரைக் காணோம். அறை முழுவதும் கண்களைச் சுழற்றினான். இல்லை. பரீட்சை சமயத்தில் அறையை விட்டு விட்டு எங்கே போயிருப்பார்?

சேதுவுக்கு அதைப் பற்றிச் சிந்தனை செய்து கொண்டிருக்க மனமோ நேரமோ இல்லை.

டெஸ்கினுள் கையை விட்டான். டிபன் பாக்ஸைத் திறந்தான். பரீட்சையாதலால் டெஸ்குக்கு ஒரு மாணவன்தான், மிகவும் சௌகரியம். பெரிய உருண்டையாக உருட்டினான். குனிந்தான். உள்ளே தள்ளினான். வலது கன்னத்தில் ஒதுங்கிய குமிழை இடப் பக்கம் தள்ளினான். நடுப்பக்கம் கொண்டு வந்தான். விழுங்கினான். ஆஹா...!

ஆசிரியரை இன்னும் காணவில்லை.

அடுத்த உருண்டை..

இப்போதைக்குப் போதும். பாத்திரத்தை மூடினான்.

“சேது! ஒரு வழியாக முழுதும் சாப்பிட்டு விட்டேன். அரைகுறைப் பசியில் பரீட்சை எழுதுவானேன்?” பின் பக்கத்திலிருந்து ஆசிரியரின் குரல் கேட்டது.

திடுக்கிட்டுத் திரும்பினான். மோர்க் குழம்பு படிந்த கையை டிராயரில் துடைத்தபடியே எழுந்து நின்றான்.

ஆசிரியர் எதிர்ப் பக்கம் வந்தார். மேஜையின்மீது இருந்த பேப்பரை எடுத்தார். நான்காகக் கிழித்தார். சேதுவின் பக்கம் விட்டெறிந்தார். “வாட் ஈஸ் திஸ்? பரீட்சைக் கூடமா? இல்லே, உன் வீட்டுச் சாப்பாட்டு அறையா?”

அந்த இடியோசையில் சேது நடுநடுங்கிப் போனான். அறை முழுவதும் கப்சிப்.

ஒருவாறாக ஆசிரியரின் கோபம் தணிந்து தமது இடத்தை நோக்கி நடந்தார்.

இப்படியாகப் பள்ளிப் பருவத்தில் அவனையும் மீறி ஆட்கொண்ட மோர்க் குழம்பு, சேது படிப்பை முடித்துவிட்டு ஒரு வேலையைப் பிடித்துக் கொண்டு சென்னைக்கு வந்த பிறகும் விடவில்லை. புது இடத்தில் முதலில் சில நாட்கள் மோர்க் குழம்பை ருசி பாராமல் தவித்துப் போன சேது, ஹோட்டல்களில் வாரத்தில் ஒரு நாள் மோர்க் குழம்பு இருப்பதை அறிந்து மகிழ்ந்தான். எந்தெந்தப் பேட்டை ஹோட்டலில் எந்தக் கிழமையில் மோர்க் குழம்பு என்பதற்கு அட்டவணையே தயாரித்துப் பையில் வைத்துக் கொண்டான். திங்கட்கிழமை திருவல்லிக்கேணி, செவ்வாய்க்கிழமை மயிலாப்பூர், புதன் கிழமை புரசைவாக்கம், வியாழக்கிழமை வண்ணாரப்பேட்டை, வெள்ளிக்கிழமை வேப்பேரி, சனிக்கிழமை, சைதாப்பேட்டை......

இப்படிப் பல வருஷங்கள் ஹோட்டல் மோர்க் குழம்பையே சாப்பிட்டுச் சாப்பிட்டு அலுத்துப் போனவன், “இனி ஹோட்டல் மோர்க் குழம்பை நம்பிப் பயன் இல்லை. வீட்டிலேயே அதற்கான ஏற்பாட்டைச் செய்து கொள்ள வேண்டியதுதான்” என்ற முடிவுக்கு வர வேண்டியதாயிற்று. கடையில் தேவையான சாமான்கள் கிடைக்கும். மோர்க் குழம்பு தயாரிக்க ஆள் தேவைப்பட்டது. கல்யாணம் செய்து கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.

பெண்ணைப் பெற்றவர் ஒருவர் சேதுவைக் கண்டு பேசி, பெண் பார்க்கப்போகும் படலம் வரை வந்தது. உறவில் இருந்த கிழவர் ஒருவரைப் பாட்டியுடன் அழைத்துக் கொண்டு போனான்.

டிபன், ஸ்வீட்டும் காரமும் நன்றாக இருந்தன. பெண் லட்சணமாக இருந்தாள். பாடினாள். சேதுவுடன் வந்த பாட்டி, அவனிடம் பெண்ணைப் பற்றி சர்டிபிகேட் கொடுத்தாள். ‘ஜடை, சவுரி இல்லே, அசல்தான். பெண் காலைச் சாய்த்து நடக்கவில்லை.’ மற்றப் பொருத்தங்களும் சரி.

அந்த வீட்டிலிருந்து கிளம்புவதற்குமுன் சேதுவுக்கு அந்தப் பெண்ணைத் தனியாகப் பார்க்கும் சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அவன் அதை நழுவ விடவில்லை.



பம்பாய் ஸ்ரீ R. S. கிருஷ்ணன் அவர்கள் குமாரி சௌ. சாந்தா B. A.க்கும், புது டில்லி ஸ்ரீ C. S. அனந்தபத்மநாபன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி A. N. மூர்த்தி B. E; (M. E. S. கல்கத்தா) க்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்

'' ஒரு கேள்வி கேட்கப் போகிறேன். உனக்கு மோர்க் குழம்பு நன்றாகப் பண்ண வருமோ ?''

வெட்கமும் பயமும் சூழ, தரையைப் பார்த்துக் கொண்டிருந்த பெண், சேதுவை மேலும் கீழும் பார்த்தாள். சட்டென்று ஓடி மறைந்தாள்.

சேது தன் சம்மதத்தைத் தெரிவித்துவிட்டு ஊருக்குத் திரும்பிய மறுநாள் அவர்களிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. இரண்டாவது தடவையாக ஒருவரிடம் பார்த்ததில், ஜாதகம் சரியில்லாததால் மேற்கொண்டு பேச முடியாமல் இருப்பதாக. காரணம் அது வல்ல. சேதுவின் மோர்க் குழம்பைப் பற்றிய கேள்வியால் அவன் மூளை வளர்ச்சியைப் பற்றி அந்தப் பெண் சந்தேகப்பட்டதாகப் பின்னர் காதில் விழுந்தது.

அதிலிருந்து பெண் பார்க்கப் போகுமிடத்தில் மோர்க் குழம்பைப் பற்றிக் கேட்பதை விட்டுவிட்டான் சேது. அப்படியும், வந்த இடங்கள் வேறு காரணங்களினால் தட்டிப் போய்க் கொண்டிருந்தன.

கடைசியாக ஓரிடத்துக்குப் போக வேண்டியிருந்தது.

அந்த வீட்டுக்குப் போய், ஆரம்பப் பேச்சுக்கள் நடந்து முடிந்து, டிபன் சாப்பிடும் கட்டம் வந்தது. அந்த நிகழ்ச்சிகள் சேதுவுக்குப் பழக்கமாகி விட்டதால் இலை முன் வந்தமர்ந்தான். சின்னதான நுனி இலையில் இரண்டு மூன்று வடைகள் வந்து விழுந்தன. அவை ஊறிப் பருத்திருந்தன. அவை அருமையான மோர்க் குழம்பில் மூழ்கியிருந்தன என்பது அவற்றின் ஓரங்களில் தெரிந்த அழகிய மஞ்சள் நிறத்தால் தெரிந்தது. தொடர்ந்து, பொன்னிறக் கை ஒன்று பிடித்த கரண்டியிலிருந்து வடைகளுக்கு மோர்க் குழம்பு அபிஷேகம் ஆனதைப் புளகாங்கிதத்துடன் கவனித்தான் சேது.

தன்னை மறந்தான். பரவசமானான். இலையில் ஒரு துளிகூட இல்லாமல் நிர்த்தூளி செய்தான்.

''ஹி....ஹி.....'' என்ற ஒலி கேட்டுத் தலையைத் தூக்கினான்.

''எங்கள் வீட்டில் மோர்க் குழம்புதான் பிரதானமான அயிட்டம். பிரமாதமாகவும் இருக்கும். எல்லாம் மோகனாதான். அவளுக்கு மோர்க் குழம்பு என்றால் உயிர். இது கூட அவள் கையால் ஸ்பெஷலாகச் செய்தது தான்.... ஹி.... ஹி....'' பெண்ணின் தகப்பனார் வாய் முழுவதையும் காட்டினார்.

சேது வாயடைத்துப் போனான்.

மற்ற விவகாரங்களைப் பற்றிப் பேச்சு வந்த போது, ''நீங்கள் எது செய்தாலும் சரி தான்'' என்று அடித்துச் சொன்னான்.

அப்போதே நிச்சயதார்த்தம் ஆகி, தேதி வைக்கும் வரை முன்னேற்றம் ஏற்பட்டது.'

பெண்ணின் தகப்பனார் மோகனாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்: ''பதிமூனு வருஷங்கள் ஆகிவிட்டது. ஒரு வேளை சேது மாறிப் போயிருப்பானோ என்று நினைத்தேன். கொஞ்சம்கூட மாறவில்லை. அப்படியே இருக்கிறான். அன்றைக்குப் பரீட்சை ஹாலில் மோர்க் குழம்பு சாதத்தை எவ்வளவு ஆசையுடன் சாப்பிட்டானோ, அதே ஆர்வத்துடன் இன்றைக்கும் சாப்பிடுகிறான்.....''

''ஆமாம், அப்பா! சாப்பிடும்போது அவர் முகத்தைப் பார்த்தீர்களோ ? மோர்க் குழம்பைப் பார்த்ததுமே அவர் முகம் தாமரையாக மலர்ந்துவிட்டது. ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தது......''

''நான் கவனிக்கவில்லையம்மா. எனக்கு ஒரே பயம். எங்கேயாவது என்னை அடையாளம் கண்டுகொண்டு, 'பாவி, அன்றைக்குப் பரீட்சை ஹாலில் பேப்பரைக் கிழித்துப் போட்டவன்தானே நீ? உன் பெண்ணைப் பண்ணிக் கொள்ளமாட்டேன்' என்று சொல்லி விடுவானோ என்று நடுங்கிக் கொண்டே இருந்தேன். நல்ல வேளை, மோர்க் குழம்பு என்னைக் கைவிடவில்லை. மோர்க் குழம்பு சேது, இன்னமும் மோர்க் குழம்பு சேதுவாகவே இருக்கிறான். அவனுக்கு எழுதப் போகிற கடிதாசில் நான் தான் அந்த வாத்தியார், என்னை நினைவில்லையா என்று கேட்டு எழுதுகிறேன்....''

''வேண்டாம்பா. கல்யாணத்திலே நாலு நாட்களும் மோர்க் குழம்பே வைத்துப் போடச் சொல்லி, அவரை முழுவதுமாகக் 'குளிப்பாட்டி' விட்டுப் பிறகு சொல்லிக் கொள்ளலாம்'' என்றாள், வருங்கால மிஸஸ் மோர்க் குழம்பு சேது.



# எழில் வருகிறது எகானமி வடிவுடன்





பிளாக்ரோஸ்—முழு
மலர்ச்சியுற்ற
பாரசீக ரோஜா
மலர்களின் மணம்
கமழ்வது.

பிக்வண்ட்—புது
வசந்தத்தில் பூத்த
மலர்களின் மென்
மணம் கொஞ்சுவது.

இரண்டுமே எழில் கொழிப்பவை. தனி சிறப்புடன் திகழ்பவை.

பிளாக்ரோஸ், பிக்வண்ட் இரண்டும்
உங்களுக்கு அதிகம் அளிக்க வடிவனில் கூடியுள்ளன

AGC-12TAM



# அம்மா

ரா. கணபதி

அம்மாவுக்குப் பேலூரில் கங்கைக் கரையில் ஒரு தனி ஜாகை அமர்த்தினர் அவளது பக்தர்கள். டாகூர் மறைந்தபோது அம்மாவிடம் அவ்வளவாக ஈடுபடாதவர்களும் கூட இந்த இரண்டாண்டுகளில் அவளது மகத்துவத்தைச் சிறிது சிறிதாகப் புரிந்து கொள்ளத் தொடங்கி விட்டனர். அவளது தேவைகளைப் பூர்த்தி செய்ய ஆர்வத்துடன் முன்வந்தனர்.

பிற்பாடு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் தலைமையான மடம் அமையவிருந்த பேலூருக்கு அம்மா இப்போதே சென்றுவிட்டாள்! அங்கொரு நாள் நீண்ட நேரம் சமாதியில் இருந்து தியானம் கலையும் தருவாயில், ''யோகேன்!, என் கை காலெல்லாம் எங்கே?'' என்று வினவினாள்.

'' இதோ தானேம்மா இருக்கு?'' என்று யோகேனும், கோலாப்பும் அவளது கர, சரணங்களைக் கைகளால் அழுத்திப் பிடித்துக் காட்டினர்.

வெகு நேரத்துக்குப் பின் அம்மாவுக்குச் சரீர உணர்வு உண்டாகி, அதனை இயக்க முடிந்தது. நமக்கோ, சரீரத்தைத் தவிர வேறெதையுமே நமதென உணர முடியவில்லை!

புரிஜகந்நாதத்துக்கு யாத்திரை கிளம்பினாள் அம்மா — பக்தர் புடைசூழ.

ஜகந்நாதர் ஆலயத்துக்குக் கிளம்பினாள். பலராம்பாபுவின் பண்டாவாகிய கோவிந்த சிங்காரி அவளுக்காகப் பல்லக்குக் கொண்டு வரக் கிளம்பினார், பலராமின் குருபத்தினியாச்சே என்று மரியாதை செய்யும் முறையில்.

சாரதை தனக்கே உரிய விநயத்துடன் பேசினாள்: ''கோவிந்தா! அவன் ஜகத்துக்கெல்லாம் நாதன். அவனைப் பார்க்கப் போற எனக்கா பல்லக்கு? நீ வழி காட்டிண்டு போ. உன் பின்னாலேயே, தீன ஸ்திரீயாக நான் வரேன்.''

அவ்விதமே சென்றாள்.

ஸ்ரீ கிருஷ்ண 'சைதன்யர் இதயமார்ந்த ஈடுபாடு கொண்டிருந்த பூரிக்கு, அவரது மறு பிறவி எனப் பலர் கருதிய ஸ்ரீ ராமகிருஷ்ணர் சென்றதில்லை. அம்மா தன் சேலையிலே ராம கிருஷ்ணரின் படத்தை மறைத்தெடுத்துக் கொண்டு ஜகந்நாதனிடம் சென்றாள்—**அவருக்கும்** சுவாமி தரிசனம் செய்து வைக்க வேண்டும் என்றே! அந்தப் படம் அவளுக்கு உயிர் கொண்டு வாழ்ந்தது!

ஜகந்நாதனைக் கண்டதும் சிரித்துக் கொண் டாள்: ''அப்படியானால் என் நாதனும் ஜகந் நாதனும் வேறு என்ன?''

புரி ஜகந்நாதர், நம் தட்சிணதேச விக்கிர கங்களைப் போல் அழகுப் பிம்பம் அல்ல! 'கலைக் கண்' படைத்த நமக்கு அங்கு நெஞ்சம் நிறையாது! ஆனால் அம்மா அங்கே பெற்ற அநுபவம்தான் எத்தகையது? ஜகந்நாதன் உயிரும் உடலும் கொண்டு நவரத்ன கசித மான சிம்மாதனத்தில் வீற்றிருக்கிறான்! அவ னுக்குப் பக்கலிலே சாமரம் இரட்டுவது, ஆஹா, அது யார்? ஆம், இங்கே நின்று தரி சனம் செய்கிற சாரதையேதான் அங்கேயும் சாமரம் வீசுகிறாள்! இங்கு, அங்கு என்ற இடைவெளிகள் அடிபட்டு விட்ட நிலையன்றோ?

அன்றிரவு கனவிலே மீண்டும் வந்தான் ஜகந்நாதன். ஆனால் உலகெலாம் கூறும் வண் ணம் கிருஷ்ணபெருமானாக அல்ல, சிவலிங்க மாகத் தரிசனம் தருகிறான்! நவரத்தின சிம்மா தனத்துக்குப் பதில், லட்சம் சாளக்கிராமங் களாலான ஆசனத்தில் எழுந்தருளியிருக்கிறது ஜகந்நாதலிங்கம். சாரதை சாமரம் வீசிய இடத்திலே தெளிவுமயமாக நிற்கிறாள் பர மேசுவரி. 'இந்தத் தெளிவைத்தான்' விமலா தேவி என்கிறார்கள்' என்று சாரதை புரிந்து கொள்கிறாள். விமலா தேவிக்குப் பலியிடப் படுகிறது. 'ஓகோ, இன்று அஷ்டமியல்லவா? அதுதான் அம்மாவுக்கு விசேஷ நிவேதனம்' என்று எண்ணுகிறாள் சாரதை. பிறகு இது குறித்துப் பக்தர்களிடம் பேசிய நம் அம்மா, ''ஜகந்நாதனே சிவன்; விமலாதான் துர்கா தேவி'' என்றாள்.

உடன் வந்திருந்த அறி ஞர் ஒருவர் ஆதியில் ஜகந் நாதர் ஆலயம் சிவமந்திர மாக இருந்த தெனவும், பௌத்த சைத்தியமாக இருந்ததெனவும் இரு கருத் துக்கள் உண்டு என்று கூறினார்.

புரியில் இருந்தபோது லக்ஷ்மியின் சந்நிதியில் அம்மா பல மணி நேரம் தியானம் புரிவது வழக்கம்.

வேறு சில ஊர்களுக்கும் பக்த கோடிகள் அவளை அழைத்துச் சென்றனர். 'இவர்களோடு இப்படிக் குஷியாக இருக்கி றோமே! 'காமார்புகுரில் இரு' என்று அல்லவோ பதி பணித் தார்?' என்று அம்மாவின் நினை வில் உறுத்தியது. தன்னைப் படாதபாடு படுத்திய அந்தக் கிராமத்துக்கு மறுபடியும் சென்று விட்டாள்! அம்மா.

காமார்புகுரிலே மகள் படும் பாட்டை அறிந்த சியாமசுந்தரி அவளைத் தன் வீட்டுக்குப் பிடி வாதமாக அழைத்து வந்தாள். ''அடி சாரதே! உனக்குப் பக வானே பண்ணின சோதனைகள் போதும். நான் கண்ணை மூடற மட்டும் இந்த மாதிரி ஊர் ஜனங்கள் ஏச்சுக்கு நீ ஆளாகப் படாது. ஆமாம், சொல்லிட் டேன்'' என்றாள் சியாமை அழுத்தமாக.

தாயுள்ளம் நம் அம்மாவுக்கா புரியாது?



"இனிமேலே நீ சொல்றபடியே செய்யறேன். ஒண்ணு உன்கூட இருக்கேன். இல்லாட்டா என் பசங்களோடே இருக்கேன்" என்று தனது அம்மாவுக்கு வாக்குத் தந்தாள்.

கண்கண்ட தெய்வம் என்று சாஸ்திரங்கள் கூறும் கணவர் அவளைக் காமார்புகுரில் இருக்கச் சொன்னாலும், அன்னை என்ற முன்னறி தெய்வம் அவள் முன்னேயே நின்று, பெற்ற வயிறு பரிதவிக்க அவளுக்கு இட்ட ஆணையைச் சிரமேற் கொண்டாள்.

ஆனால் தன்னைப் பார்க்க வருபவர்களிடம், "காமார்புகுர் மண்ணுலே போய் விழுங்கோ. டாகுர் ஜனிச்ச புண்ணிய பூமி" என்பாள். "அங்கே ராத் தங்கினா ரொம்ப விசேஷம்" என்பாள். அவளது பிரபுவின் குடிலுக்கு ஒரு பழுது வராமல், அவ்வப்போது புதுப்பிக்கப் பணம் அனுப்பிக் கொண்டேயிருப்பாள். அது மட்டுமல்ல, அவளைத் திருணமாத்திரமாக மதித்த ராமலால் வீட்டுக்கு மாடி கட்டவும் அம்மாவே பொருளுதவி செய்தாள். பெண் குலத்துக்கு அம்மா கற்பிக்கும் பல பாடங்களில் புக்ககப் பாசமும் ஒன்று !

தன் மாதா சொன்னாளே என்று புக்ககத்தினரிடம் அவதிப்படாமல் இருக்கப் பிறந்தகம் வந்தாள். பிறந்தகத்தில் அவதிப்பட்டாள். அவளுடைய தம்பிகளின் லட்சணம் அப்படி!

தன் தாய்க்கு வாக்குத் தந்த அம்மாவுக்கு, ராமகிருஷ்ணரிடம் அவரது தாய் குறித்துத் தான் தந்த வாக்கு நினைவு வந்தது. ஒரு நாள் ராமகிருஷ்ணர் அவளிடம் சொன்னார். "என் அம்மாவுக்கு நான் பிள்ளைன்னு என்ன பண்ணினேன்? அவ போனவிட்டு ஒரு நான் தர்ப்பணமாவது பண்ணுவோமேன்னு கங்கையைக் கையிலே எடுத்தேன். ஆனால் நான் எப்பாடு பட்டாலும் கையிலே ஜலம் சேர்ந்தாத்தானே? சந்நியாசியான நான் மாத்ரு கர்மம் செய்யறது ஜகன்மாதாவுக்குச் சம்மதமில்லே. தர்ப்பணம் பண்ணாமலே திரும்பிட்டேன். சாரு, நீ என் மாதிரி சந்நியாசம் வாங்கிக்கல்லே. அதனாலே நீ எப்பவாவது கயைக்குப் போய் அம்மாவுக்குப் பிண்டம் போட்டுடறயா?"

சாரதையின் கன்னங்கள் நனைந்தன. சந்திரமணியின் வயிற்றைத் தேடி வந்து கர்ப்பவாசம் செய்த பரமபுருஷன் அதற்கு மேல் அவளுக்கு என்ன செய்ய வேண்டும்? தன் அன்னைக்குக் கடனாளியாகவே நின்றுவிட்டதாகக் கருதும் கணவரிடம், "கயைக்கு நாம் சேர்ந்து போவோம். நான் அம்மாவுக்குப் பிண்டம் போடறேன்" என்றாள்.

"அந்த ஒரு க்ஷேத்திரத்துக்கு மட்டும் இந்த சரீரம் போக முடியாதே" என்றார் ராமகிருஷ்ணர் தாபத்துடன்.

ஆதியில் ராமகிருஷ்ணரின் தந்தைக்குக் கயையில் வதியும் கதாதரன், தானே மகனாகப் பிறப்பேன் என்று திருவாக்குத் தந்திருந்தான். அதனால்தான் ராமகிருஷ்ணருக்கு 'கதாதர்' எனப் பெயரிடப்பட்டது. கயை சென்றால் தம் சரீரம், காந்தத்தால் இழுக்கப்படும் காந்தம்போல், கதாதர மூர்த்திக்குள் அடக்கமாகிவிடும் என்பார் ராமகிருஷ்ணர்.

இப்போது அதையெல்லாம் நினைவு கூர்ந்தாள் அம்மா. தன் அடியார் குழாத்தில் சிலருடன் கயைக்குச் சென்றாள். விஷ்ணு பாதத்தில் பரம புண்ணியவதியான தன் மாமியாரை ஸ்மரித்துப் பிண்டமிட்டாள். கணவரது ஓர் ஆக்ஞையை நிறைவேற்றியது அவளுக்கு மிகுந்த மன நிறைவளித்தது.

அம்மா கல்கத்தாவுக்குத் திரும்பிய பின் ஒரு சோக சம்பவம் நிகழ்ந்தது. அன்று டாகூருக்கும், இன்று இவளுக்கும் அணுக்கத் தொண்டராக அரும் பணி செய்த பலராம் பாபு மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

அம்மாவின் மனம் இடுகாடாயிற்று. கல்கத்தாவுக்கு அணிமையில் குஸூரி என்ற கிராமத்தில் கங்கைக் கரையில் இடுகாட்டை அடுத்த ஓரிடத்தில் சிறிது காலம் வசித்தாள்.

நரேந்திர நாதனுக்கு அனைவரையும் விடுத்து இமாலயத்துக்குச் சென்று தவமிருந்து உன்னத அநுபூதிகளைப் பெறும் ஆர்வம் இச்சமயத்தில் கரை புரண்டது. அம்மாவிடம் வந்தார். பௌருஷ பர்வதமான நரேன் அம்மாவின் இரு முன்னர் நாணல் துரும்பு போல் ஆகிவிடுவது வழக்கம். நெடுஞ்சாண் கிடையாக அவள் முன்னே விழுந்து கிடந்தார்.

காமார்புகுரில் அம்மா பெற்ற திவ்யக் காட்சியில் கங்கையைக் கழலிணையில் விருந்து பெருக்கிய டாகூர், நரேனுக்குள் அல்லவோ சென்று மறைந்தார்? அந்த நினைவு வரவே அம்மா ஸ்தம்பிதமாக அமர்ந்திருந்தாள்.

நமஸ்கரித்து எழுந்த நரேந்திரர், "அம்மா, பாடறேன், கேக்கறியா?" என்றார்.

"திவ்யமா குழந்தே."

நரேன் பாடினார். திவ்யமாகப் பாடினார். ராமகிருஷ்ணர் கற்றுக் கொடுத்த பாட்டுக்களைப் பாடினார். அவரது எல்லையில்லா இனிமை பொருந்திய குரல், பாடல்களின் ஆழ்ந்த பொருள், டாகூரின் நினைவு எல்லாமாகச் சேர்ந்து, அம்மா 'புன்புலால் யாக்கை

ஞானிகளுக்கும் துஷ்டர்களுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவருமே துன்பம் தருபவர்கள். ஆனால் ஒரு வித்தியாசம். ஞானிகளின் பிரிவு பெருந் துன்பம். துஷ்டர்களின் உறவு பெருந் துன்பம்.

—துளசிதாசர்

புரை புரை கனிய, என்பெலாம் உருக' அமர்ந்திருந்தாள்.

''அம்மா, எல்லாத்தையும் விட்டுட்டு ஈசுவரானுபவத்தைச் சாசுவதமாக்கிக்கணும்னு ஹிமாலயம் போகப் போறேன். அந்த நிலை ஏற்பட்டாலே நான் உண்மையான மநுஷ்யன். அப்படிப்பட்ட உண்மை மநுஷ்யனா ஆக முடிஞ்சால் திரும்பி வருவேன். இல்லாட்டா இது தான் நான் உன்கிட்ட வாங்கிக்கற பிரிவுபசாரம்'' என்றார் நரேன்.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும் அம்மா ஆடிவிட்டாள்.

''மகனே! உன் வாயினாலே நீ அம்மாகிட்டே அப்படிச் சொல்லப்படுமா?'' என்றாள்.

நரேன் தமது நாக்கைக் கடித்துக் கொண்டார். ''ஆமாம்மா, நான் சொன்னது தப்புத்தான். உன் ஆசிர்வாதம் இருக்கச்சே என் லட்சியம் எப்படித் தோற்றுப் போகும்?'' என்றார்.

''டாகூர் கிருபையாலே மங்களமாகப் போய், ஜயசாலியாகத் திரும்பு அப்பனே!'' என்று மனமார ஆசி சொன்ன தேவி, ''அது சரி, அம்மாகிட்டே சொல்லிண்டியா?'' என்றாள்.

அதுதான் தாயுள்ளம்! நரேன், ஜனக மாதாவிடம் சொல்லிக் கொண்டிருப்பானோ, மாட்டானோ என்று ஜகன் மாதா அந்தத் தாய்க்காகப் பரிந்துரைக்கிறாள்.

நரேன் அவளது திவ்விய முகத்தை நிறைவுடன் பார்த்து, நிச்சயத்துடன் கேட்டான்: ''அம்மாவா அம்மா? உன்னைத் தவிர யார் அம்மா?''

குஸுரி வீட்டிலிருந்து வர நகரத்தில் ஒரு வீட்டுக்குப் பெயர்ந்தாள் அம்மா. அங்கு ஒரு நாள் கிரீஷ்சந்திர கோஷ் தமது அருமைப் பிள்ளைக் குழந்தையுடன் வந்திருந்தார். கிரீஷ் வங்கத்திலே பிரபல நாடகக் கலைஞரும் ஆசிரியருமாவார். பூர்வத்தில் தாம் செய்யாத பாவம் பாக்கியில்லை என்று பிற்காலத்தில் ஓயாமல் கூறிப் புலம்பியவர் இவர். ராமகிருஷ்ணர் ''உங்கள் வாழ்க்கை முழுவதற்கும் நான் பொறுப்பாளி'' என்று சொல்லி கிரீஷை 'மேட்—ஓவர்' செய்து கொண்டார். கிரீஷ் அம்மாவின் எதிரிலேயே வரமாட்டார். ஒருசில பாக்கியசாலிகள், அவளது பாத விரல் நுனிகளை மட்டும் காணும் பேறு பெற்றிருக்கின்றனர். மற்றவர்கள் அவள் இருக்கிற அறைக்கு வெளியே நமஸ்கரித்து, உள்ளே தேவி இருக்கிறாள் என்ற நினைவுடன் அங்கு அமர்ந்து, தியானித்துச் செல்வர். கிரீஷோ 'பரம அதமனாகிய என் கண்கள் புண்ணிய மாதாவின் மீது படக் கூடாது' என்று கூறி எட்டாத் தொலைவிலேயே நின்று வணங்கிப் போவார்.

இன்று அவரது மூன்று வயசுப் பிள்ளைக்கு அப்பாவின் மடியில் இருப்பாகவே இல்லை. மாடி அறையைச் சுட்டிக் காட்டி, ''ஊ ஊ'' என்று அவரைத் தார்க்குச்சி போட்டவாறு இருந்தான், பேசும் சக்தி பெற்றிராத அப்பிள்ளை. டாகூரே தமது அம்சத்தி லொன்றை இப் பிள்ளையாக அனுப்பி யிருப்பதாகக் கிரீஷுக்கு ஒரு நம்பிக்கை.

இன்று அவன் மாடி அறையைக் காட்டி ''ஊ'' சொன்னபோது, அருகே இருந்தவர்கள் அம்மா அங்கே தான் இருக்கிறாள் என்று கூறினர். மாடியை நோக்கிக் கும்பிட்டார் கிரீஷ். குழந்தையைச் சிஷ்யர்களோடு மாடிக்கு அனுப்பி வைத்தார். அந்தப் பிள்ளை நேரே சென்று அம்மாவின் கால்களைப் பிடித்துக் கொண்டு தலையால் கும்பிட்டது. அம்மா அதை அன்புடன் அங்கமெலாம் தடவித் தந்தாள்.

கீழே இறங்கி வந்த பாலன் கிரீஷை விரலால் குத்தி, சைகை மூலம் அவரையும் மாடிக்கு வருமாறு உந்தினான்.

''குழந்தே! இந்தப் பாவியை இப்படிச் சோதிக்காதே'' என்று கிரீஷ் புலம்பியும் பலனில்லை. பாலன் உன்மத்தம் பிடித்தவன் போல் அமளி துமளி செய்தான். கடைசியில் கிரீஷ் அவனைத் தூக்கிக் கொண்டு அம்மாவின் சந்நிதிக்குப் போகும்படியாயிற்று.

புயல்காற்றுத் தருவென அவரது உடம்பெல்லாம் ஆட அம்மாவின் காலருகே விழுந்தார். ''அம்மா! இந்தக் குழந்தையின் பிடிவாதத்திலேதான் துணிந்து வரும்படியாச்சு, க்ஷமிக்கணும் தேவி'' என்றார் நாக்குழற.

மிக மெல்லிய குரலில் ''டாகூர், டாகூர்'' என்று அம்மா முனகினாள்.

சிறிது காலத்திலேயே அந்தப் பாலகன் டாகூரைத் தேடிக் கொண்டு போய் விட்டான்!

**சா**ரதா தேவிக்குப் பழைய ரத்தக் கடுப்பு திரும்பிக் கொண்டது. பக்தருக்குச் சிரமம் தர வேண்டாமென்று ஜயராம்பாடிக்குச் சென்றாள். உடம்பு

சொஸ்தமாயிற்று. பிறந்தகத்திலேயே தொடர்ந்து தங்கியிருந்தாள்.

சியாமசுந்தரியின் 'செல்ல'மாகிவிட்ட ஜகத்தாத்ரிக்குப் பூஜை விமரிசையாக நடந்தது. சாரதையின் பசங்களில் அநேகரும், பக்தர்களும், புத்திர சோகத்துக்கு ஆறுதல் தேடிய கிரீஷ"ம் ஜயராம்பாடிக்கு வந்து பூஜையில் கலந்து கொண்டனர். அம்மாவின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. தன் பிறந்த வீட்டில் தன் அதிதிகளாகப் பிள்ளைகள் வந்திருப்பதில் அவளுக்கு ஒரே பூரிப்பு. முன்பு தக்ஷிணேசுவரத்தில் செய்தது போலவே இப்போது ஓயாமல் விருந்து சமைத்துப் போட்டு மகிழ்ந்தாள்.

பதினேந்து வயசு காளி கிருஷ்ணன் அப்போதுதான் ராமகிருஷ்ண மடத்துக்கு அடிக்கடி வரத் தொடங்கியிருந்தான். இன்னும் அவன் துறவு பூணவில்லை. வயசில் சிறியவனாதலால் அவனுக்கு அம்மாவிடம் சலுகை அதிகம். அவனைக் கண்டவுடன் அம்மா, அவனது மூகவாயைத் தன் விரல்களால் தொட்டு அந்த விரல்களை உதட்டில் வைத்துக் கொண்டாள் என்றால் பாருங்களேன்! மற்ற ஆடவர்களுக்கும் அம்மாவுக்குமிடையே குஷியுடன் ஓடி ஆடிக் கொண்டிருந்தான் காளி கிருஷ்ணா. அம்மாவின் கையிலிருந்து காரியத்தைப் பிடுங்கிக் கொள்வதில் அவனுக்கு ஒரே துருதுருப்பு. அடுப்பு மூட்டுவதற்காக வரட்டி, அல்லது தணல் தட்டை .வன் வாங்கிக் கொள்ள அவசரப்படும்போது அம்மா, "பொறுடா அப்பனே! பெற்ற தாயார், பிள்ளை கையிலே நேரடியா வரட்டியும் அக்கினியும் தரப்படாது. தரையிலே வைக்கிறேன். எடுத்துக்கோ" என்பாள்.

சியாமசுந்தரியின் உதார குணத்தை இந்தத் தொடரின் தொடக்க அத்தியாயத்திலேயே பார்த்திருக்கிறோம். அந்த உதாரம்தான் அவளது உதரத்திலே நம்ம அம்மா வந்து குடிபுகுமாறு உதவியது. இப்போது "பாட்டி, பாட்டி" என்று தேவாமுத பிந்துக்களைத் தெறித்து அவளைக் கூப்பிட்டுக் கொண்டு வந்திருக்கும் பேரக் குழந்தைகளை வெகு அருமையுடன் சீராட்டினள் சியாமை. "ஒரு காலத்திலே நீங்களே பார்ப்பேள்—எத்தனை குழந்தைகள் உங்க பெண்ணை 'அம்மா, அம்மா'ன்னு சுத்தப் போறதுகள்ன்னு" என்று அன்றொரு நாள் 'மாப்பிள்ளை' கூறியது சியாமையின் மனச் செவியில் ஒலித்தது. "அப்பாடா, மறுபடி இந்த அகம் அவர் இருந்த நாள் மாதிரி பகவானுடைய அகமாக, பாகவதாளுடைய அகமாக

**கடவுள் உன்னிடமே இருக்கிறான், மலரினுள்ளே மணம்போல. கஸ்தூரி மான் தன் நாபியில் கஸ்தூரி இருப்பதைத் தெரிந்து கொள்ளாமல், மேய்ச்சல் தரையைச் சுற்றிச் சுற்றி வருவது போல ஏன் கடந்து கொள்கிறாய்?**

*— கபீர்தாசர்*

ஆயிடுத்து" என்று அந்தப் பாட்டி சொல்லிச் சொல்லி ஆனந்தித்தாள்.

தன் அதிசய மாப்பிள்ளையைப் பற்றிய பல விருத்தாந்தங்களைச் சொல்லி அவரது பக்தர்களைப் பரவசமுறச் செய்தாள்.

ஒரு நாள் நடந்த நிகழ்ச்சி சியாமசுந்தரி, சாரதாமணி இவர்களின் இதயத்து அடியாழம் வரையில் பாய்ந்து சென்று உலுக்கியது. தேஸ்ராவைச் சேர்ந்த ஹரிதாஸ் பைராகி என்ற ஆண்டிப் பண்டாரம் வயலின் வாசித்தபடி ஊர் ஊராகப் பக்தி கீதங்கள் பாடி வருவார். அன்று அவர் சியாமையின் வீட்டுக்கு வந்து ராதிகா பாபு என்ற கவியின் நீண்டதொரு பாடலை நெகிழ்ச்சியுடன் கானம் செய்தார். பார்வதி தேவியைப் பார்த்து அவளது தாயான மேனை பாடுகிற பாடல்.

என்னே இன்பச் சேதி இது! - என்
கண்ணே உமையே கனியமுதே!

விண்ணோருலகும் உனை வணங்கி
'அன்னே, அன்னபூரணியே' என,
எந்நேரமும் அமுதம் படைத்தே
தன்னேரில் புகழ் நிறுத்தனையாம்! (என்னே)

முன்னே சிவனே மோகித்தான்
"உன்னோன் அவனைக் காணுதே" - என
மின்னேர் மேனி மெலிவித்தாய், அ-
பர்ணே* என்று பேர் பெற்றாய்

பின்னே [illegible]தான் பிச்சாண்டி
"மன்னே!" என்றவன் பின்போனும்
"பெண்ணே வேண்டாம்" எனத் தடுத்தேன்
கண்ணே மடையாய்த் திறந்தழுதேன்.

ஏனோர் ஊரார் உன்பதியை
'காசிலன் பேரிலன் இடுகாட்டுத்
துரியன் திகம்பரன் தேசமிலன்
மாலில் உமையை மறுகேட்ட
தோரிக்குந் தந்தனை' என்றனரே.
ஊமியென்றே அவர் உரை வருத்த
கூனிக் குறுகிக் குமைந்து விட்டேன்.

---

* கடுந்தவம் செய்வோர் தாளுக உதிருகிற சருகை மட்டும் புசிப்பர். ஆனால் சிவனுக்காகத் தவமிருந்த உமை, இலை (பர்ணம்)யைக்கூட உண்ணாததால் 'அபர்ணா' எனப் பெயர் கொண்டாள். பிராகிருத மொழியில் இது 'அபன்னா' என்றாயிற்று. இலையும் உண்ணாத இவள், அன்னத்துக்காகக் கப்பரை ஏந்தும் பிட்சாடனனை மணந்து, பிற்பாடு அன்னபூர்ணேசுவரியாகிவிட்டாள்!

ஏசினவர் இன்று கூசுகிறார்!
கூசியவள் இன்று குதூகலித்தேன்!
காசினி போற்றும் காசியிலே - சிம்-
மாசினியாம் சிம்மாசனியாம்
ஆசியும் அடியிலும் அனைத்து உயிர்-
ராசிக்களிக்கும் ராசி கொண்டாய்!
திகம்பர சாமித் திருக்கதவை
திக்பாலகரும் நோக்கி நிற்க,
ஏதலன் ஏழையன் பாதமதில்
ஈதல் இரந்து குபேரன் விழ,
மந்திரம் மானசம் என்றவளே
இந்திரன் சந்திரன் இறைஞ்சினரே!
ஆண்டியன் ஆண்டவன் ஆனது(உ)னைத்
தீண்டிய திவ்விய பாக்கியம்மா!

இதுவரை மேனியின் வாக்கால் பாடி வந்த கவி ராதிகா, இப்போது அன்னைக்காக ஆறுமல் தவித்து, ஆருத் தவிப்பு ஆருச் சினமாகப் பரிணமிக்கத் தம் வாய்மொழியாகவே பாடி முடிக்கிறார்:

'சண்டிய செல்வமும் என்னிடத்தே' என
மூண்ட செருக்கினில் மூழ்கிய உன்
நீண்ட கண்ணைச் சொந்த மகன் ராதை
வேண்டியும் மன்றிட மனமிலேயே!

''அந்த நாளில் மாப்பிள்ளை பைத்தியம்னு ஊரார் பேச்சைக் கேட்டுக் கேட்டுத் தற்கொலை பண்ணிக்கலாமான்னுகூட எனக்குத் தோணும். நல்லவேளை, அப்படிச் செய்யாம விருந்தேனே, இன்னிக்கு நீங்க இத்தனை குழந்தைகள் என் சாருவை திவ்விய மாதாவாகப் பூஜை பண்றதைப் பார்க்கிறேனே?'' என்ருள் சியாமை. அப்புறம் மாப்பிள்ளையின் மகிமை ஊருக்குத் தெரிந்தது. சாரதையின் கரம் தீண்டியதன் பாக்கியம்தானே என்னவோ? மேனையின் நிலையில் சியாமை இருந்தாலும், ராதிகாவின் நிலையில் நம் அம்மாவின் குழந்தைகள் ஒருகாலும் இல்லை! அவர்சினை இவள் ஏங்கச் செய்ததே கிடையாதே!

ஜகத்தாத்ரி பூஜையின்போது அம்மா தேவியின் பிம்பத்தருகே வந்து நின்று விடுவாள். நீண்ட நேரம் கையைக் குவித்து, கண் குவித்து, மனம் குவித்து நிற்பாள்; பிறகு நெடு நாழிகை கையை வீசிச் சாமரம் இரட்டுவாள். மூன்று தினமும் ஊராருக்கு அன்னம் பாலிக்கப் பட்டது.

பிள்ளையைப் பறி கொடுத்து வந்திருந்த கிரீஷ் ஒரு நாள் ஏரியில் குளித்தவுடன், ஈர வஸ்திரத்துடனேயே ஓடிவந்து அம்மாவுக்கு நமஸ்கரித்தார். அம்மாவின் பாத விரல்களை மட்டும் நடுக்கத்துடன் முன்பு தரிசித்த அவர் இன்று ஆறுதல் வேண்டித் தலை தூக்கி அவளைப் பார்த்தார். அம்மாவின் மூக்காடும் அப்போது சற்று விலகியது.

கிரீஷின் உடம்புக்குள் ஒரு தெய்விக மின்னல் பாய்ந்தது.

''ஆஹா, கடைசியில் அது நீங்கள் தானு, அம்மா?'' என்று கேட்டார். ஆனல் குரல் வெளியே வராமல் மனத்துக்குள்ளேயே மடங்கிக் கொண்டது. பல ஆண்டுகளுக்கு முன் கிரீஷுக்குக் காலரா கண்டிருந்தபோது கனவிலே ஒரு தாய் வந்தாள். அகலமான சிவப்புக் கரைப் புடவை உடுத்தியிருந்த அவள் ''இந்தா, இதைச் சாப்பிடு'' என்று சொல்லிக் கொண்டு அவர் வாயிலே பிரசாதத்தைப் போட்டாள். அதன் சுவை தேவாமிருதமாக இருந்தது. கிரீஷ் விழித்தெழுந்தார். சந்தேகத்துக்கிடமின்றி இன்னமும் அவரது அடித் தொண்டையில் தித்திப்பு ஒட்டிக்கொண்டிருந்தது. காலராவும் குணமாகிவிட்டது. அன்று வந்த அதே தாயைத்தான் இந்த அம்மாவின் திருமுகத்தில் கண்டுகொண்டார் கிரீஷ்.

யோகின்—மா மூலமாக அவர் பழைய சம்பவத்தைப் பற்றிக் கேட்டு அனுப்பினர். தன்னைக் காளியாகக் கண்ட பகடித் தம்பதியிடம், ''யார் கண்டா?'' என்று மூடிமறைத்த அம்மா, பிள்ளையை இழந்து வந்திருந்த கிரீஷிடம் கருணை கொண்டாள். ''பல ஆண்டுகளுக்கு முன் அவரைக் காத்தது நானே'' என்று தெளிவாகத் தெரிவித்தாள்.

அவளிடம் கிரீஷ் பேசும் அளவுக்கு உரிமை பெற்றபோது ''உங்களை நாங்கள் அம்மா என்கிறோம்; நீங்களும் அம்மாவாகவே சொல்லிக் கொள்கிறீர்கள்! அம்மா என்றால் எந்த முறையில்?'' என்று கேட்டார்.

''எந்த முறையிலா? அம்மான்னு அம்மாதான்! நான் உங்களுக்கெல்லாம் உண்மையாகவே அம்மா!'' என்று சிறிதும் தயக்கமின்றி மறுமொழி தந்தாள் தேவி. ''குரு பத்தினியை அம்மான்னு பாவிக்கிற பழக்கம் உண்டே, அந்த மாதிரி இல்லை. அம்மா மாதிரி, பிள்ளை மாதிரின்னெல்லாம் நினைச்சுப் புதிசா ஏற்படுத்திண்ட உறவு முறை இல்லை இது. 'என் தாயே, மாதா'ன்னு, 'என் மகனே, புத்திரனே'ன்னு வெறுமனே வாயாலே பகட்டுப் பண்ற விஷயமும் இல்லை. நான் உங்களுக்கெல்லாம் உண்மையான அம்மா'' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லி முடித்தாள் — உண்மையான அம்மாவாக நாம் நினைக்கும் பெற்ற தாயார்களும் வெவ்வேறு பிறவிகளில் பொய்யாகிவிடும்போது, அத்தனை பிறவிகளிலும் தொடர்ந்திருக்கும் ஒரே உண்மை அம்மாவுக்குரிய அழுத்தம் திருத்தத்துடன்.

(தொடரும்)

# நீங்கள் இன்று எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள் என்பது முக்கியம் அல்ல, நாளைக்காக எவ்வளவு சேமிக்கிறீர்கள் என்பது தான் முக்கியம்

கரண்ட், சேவிங்ஸ், ஃபிக்ஸ்ட் மற்றும் ரெக்கரிங் டிப்பாஸிட் ஆகிய கணக்குகளை துவக்கவும், சேமிக்கவும் பல வசதிகளை நாங்கள் அளிக்கிறோம்.




தலைமை காரியாலயம் :
கல்கத்தா

UCO-2/72

## இளைஞர் சமுதாயம்



### 5. என்னிடம் சொல்லியிருந்தால்...

**கா**ர் வேகமாகப் போய்க் கொண்டிருக்கும்போதே உள்ளேயிருந்து வாழைப் பழத் தோலும், ஹோட்டல் பட்சணப் பொட்டல இலைகளும் வெளியே பறந்து வந்து விழுவது; தெருவில் நாம் நடந்து போய்க் கொண்டிருக்கும்போது ஒரு வீட்டு மூன்றாவது மாடியிலிருந்து குப்பை சொரிவது; கொஞ்சம் ஒதுக்குப்புறமான தெருவாகவோ, சந்தாகவோ இருந்து விட்டால் அது சிறுநீர் கழிக்கும் இடமாக மாறிவிடுவது — இவையெல்லாம் நமக்குப் பழக்கமாகிவிட்ட விஷயங்கள்.

இப்படி யெல்லாம நடக்காமலிருந்தால் தான் அதிசயப்படுவோம்! ஆனால் நல்ல வேளையாக 'Polygons' என்ற இளைஞர் சங்க அங்கத்தினர்களின் கண்களில் இந்தக் கண்ணராவிகளெல்லாம் உறுத்தின. எல்லோரையும்போல் இவர்கள் 'சரிதான் இப்படித் தான் இருக்கும்' என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ளவில்லை. இந்தச் சமுதாய இழுக்குகளுக்குத் தீர்வு காணவேண்டும் என்று முடிவு செய்தார்கள். இவர்களில் சிலர் மாணவர்கள். பெண்மணிகளும் இதில் சேர்ந்திருக்கிறார்கள்.

ஒரு நல்ல காரியத்துக்குச் சேர்ந்து உழைப்பது என்றும் நம் நாட்டில் ஆள் கிடைப்பது சற்றுச் சிரமம். பொறுப்பை ஏற்றுக் கொண்டு வேலை செய்ய யாரும் முன்வரமாட்டார்கள். கட்டின வீட்டுக்குப் பழுது சொல்ல மட்டும் எல்லாரும் தயார்.

"ஸார்! உங்கள் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்துவிட்டீர்களாமே? என்னிடம் எல்லாப் பொறுப்புக்களையும் விட்டு விடுங்கள்" என்று என் பெண் கல்யாணத்தின்போது என்னிடம் சொன்னவர்களெல்லாம் மாப்பிள்ளை அழைப்பு வரையில் என்னை எட்டிக்கூடப் பார்க்கவில்லை. ஆனால் கல்யாணம் நடந்து முடிந்த பிறகு நண்பர்களும் உறவினர்களும் மாப்பிள்ளை அழைப்பு மோட்டார் கார் முதல் சந்தனம் வரையில் எல்லாவற்றுக்கும் 'என்னிடம் ஒரு வார்த்தை சொல்லியிருக்கப் படாதா?' என்று கேட்டு நான் ஏற்பாடு செய்திருந்த பண்டங்களுக்குக் குறை சொல்லித் தீர்த்தார்கள். இப்படிப் பட்டவர்களுக்கு பாலிகான்ஸ் இளைஞர் சங்கத்தில் இடமில்லை.

"மன்னவன் என்ற மனிதனில்லே -- அங்கே
மந்திரி தந்திரி யாரும் இல்லே."

என்று நாமக்கல் கவிஞர் சொன்னதுபோல் இந்தச் சங்கத்துக்குச் செயலாளர், தலைவர் என்றெல்லாம் யாரும் இல்லை. எல்லாரும் எல்லாப் பொறுப்புக்களையும் வகிக்கின்றனர்; எல்லாரும் உழைக்கின்றனர்.

பல கோணங்களிலும் பொதுப் பணி செய்ய வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன்தான் இந்த இளைஞர் சங்கத்துக்கு Polygons என்று பெயர் வைத்திருக்கின்றனர்.

ஏழை மாணவர்களுக்கு இலவசமாகப் பாடம் சொல்லிக் கொடுத்துப் பரீக்ஷையில் தேற உதவி செய்வதை ஒரு முக்கிய பணியாக மேற்கொண்டிருக்கின்றனர். சுமார் முப்பது ஏழை எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களைப் பொறுக்கி எடுத்து அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து முதல் வகுப்பில் தேறச் செய்ததை அவர்கள் பெருமிதத்தோடு கூறினர்.

சேரி வாழ்வோர் நலனில் அதிக அக்கறை எடுத்துக் கொள்கின்றனர். அவர்களுக்கு இலவச வைத்திய உதவிக்கு ஏற்பாடு செய்து மருந்தும் வழங்குகின்றனர்.



தெருக்களைச் சுத்தம் செய்யும் இயக்கத்தைத் தொடங்கிப் பல இடங்களில் இச்சங்க அங்கத்தினர்கள் சென்று சுத்தம் செய்திருக்கின்றனர். நாகரிக வாலிபர்கள் தங்கள் தெருக்களைச் சுத்தம் செய்யும் அதிசயத்தைப் பார்த்த மக்கள்

தாங்களும் அந்தப் பணியில் பங்கெடுத்துக் கொண்டனராம். அவர்கள் மாத்திரமல்ல, சில நகர சபை ஊழியர்களும், கவுன்சிலர் களும் கூட இவர்களுடன் சேர்ந்து கொண்டு மேற்படி பணியில் ஆர்வம் காட்டினராம்.

ராயப்பேட்டை பாலாஜி நகரி லுள்ள இந்தச் சங்கத்துக்கு நானும் என் நண்பரும் போனதும் மிகவும் அன்புடன் வரவேற்ற சங்க அங்கத்தினர்கள் தங்களை அறிமுகம் செய்து கொண்டனர்.



"1971 செப்டம்பர் மாதத்தி லிருந்து டிசம்பர் மாதம் வரை யில் மொத்தம் இருபது தெருக் களைச் சுத்தம் செய்திருக்கிறோம். பிறகு வீட்டுக்கு வீடு சென்று தெருக்களைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டியதன் அவ சியத்தை எடுத்துச் சொல்லி நகரத்தின் சுகா தாரத்தில் அவர்களுக்குப் பங்குள்ளதை உணர்த்தி எங்கள் பணியையும் அவர்களுக் குக் காட்டினோம். சுமார் இரண்டாயிரம் குடித்தனக்காரர்களை இதுவரையில் சந்தித் திருக்கிறோம், இத்திட்டத்தின் கீழ்" என்றார் சங்க அங்கத்தினர் ஒருவர்.

"தெருக்களைச் சுத்தம் செய்வது நல்ல பணிதான் என்றாலும் இதைப் பரவலாகச் செய்யாமல் ஒரு குறிப்பிட்ட நகர்ப் பகுதியை எடுத்துக் கொண்டு அங்கு அப் பணியைச் செய்தால் பயனுள்ளதாக இருக்கும் என்று தோன்றுகிறதே!"

"உண்மை. இதை நன்கு உணர்ந்துதான் மந்தைவெளியில் உள்ள ஆண்டிமானியம் என் னும் பகுதியைத் தேர்ந்தெடுத்துக் குடிசை மாற்று வாரியத்தை அணுகி அவர்களுடைய ஒத்துழைப்புடன் எங்கள் சுத்தம் செய்யும் பணியைத் தொடங்கினோம். இங்கு சுமார் இரண்டாயிரம் மக்கள் இருக்கிறார்கள். ஆனால் இவர்களுக்கு அடிப்படைத் தேவைகளை இன்னும் கவனிக்கப்படாமல் இருக்கின்றன. அதாவது சாக்கடை வசதி, கக்கூஸ் வசதி, இல்லை. நாங்கள் தினம் இங்கு சுத்தம் செய் கிறோம். ஒரு சின்ன வைத்தியசாலை வைத் திருக்கிறோம். பள்ளமும் மேடுமாய், மழை காலத்தில் வெள்ளக் காடாகக் காட்சியளிக் கும் இந்தப் பகுதியில் லாரி லாரியாக மண் கொண்டு வந்து கொட்டி, மேடாக்கி, சாலை யும் போட்டிருக்கிறோம்..."

இப்படி ஓர் அங்கத்தினர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே இன்னொர் அங்கத் தினர், "நாமெல்லாரும் இரண்டாவது மாடி யில் மின் விசிறிக்கு அடியில் அமர்ந்து கொண்டு சேரியைச் சுத்தம் செய்வதைப் பற்றிப் பேசுவதில் பொருளே இல்லை. நீங்கள் அங்கே போய்ப் பார்த்தால்தான் உங்களுக்கு விஷயம் புரியும்" என்றார்.

"ரொம்ப சரி" என்று ஒப்புக் கொண்டு நானும் என் நண்பரும் புகைப்படக்காரருடன் மந்தைவெளியில் உள்ள அந்தப்பகுதிக்குச் சென்றோம். மாணவர்கள் செய்யும் மகத் தான தொண்டை நேருக்குநேர் அங்கே காண முடிந்தது.

சென்னை நகரத்தில் துப்புரவாக்குவதற்கு எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. இங்கு தொண்டு செய்யும் வாலிபர்களுக்குத்தான் பஞ்சமே தவிர அசிங்கத்துக்கும் நாற்றத்துக் கும் பஞ்சமில்லை! மேலை நாடுகளிலானால் சமூகத் தொண்டு செய்வதற்கு இடம் தேடி அலைய வேண்டும். இங்கு அந்தக் கஷ்டம் இல்லை. மந்தைவெளியில் ஆண்டிமானியம் என்னும் அந்தப் பகுதிக்குச் சென்றதும், நம் நாட்டில் உள்ள எல்லா இளைஞர்களும் சேர்ந்தால்கூட இத் தொண்டு செய்யப் போதாது என்று தோன்றியது. ஆயினும்



□ தெருவைச் சுத்தம் செய்தல்.

□ ஆண்டிமானியம் சேரிக் குழந்தைகளுடன் இளைஞர் சமுதாயம்.

□ மயிலாப்பூரில் தெருவைச் சுத்தம் செய்தல்.

□ அமெரிக்க சமாதானக் குழுவினருடன் பாலி கான்ஸ் சங்கத்தினர்.

பாங்காக்கள்' இளைஞர்கள் அந்த இடத்தைச் சீர்திருத்தும் பொறுப்பை ஊக்கத்துடன் மேற்கொண்டு வெற்றி பெற்றுள்ளனர். அசிங்கமென்று எண்ணுமல், அருவருப்புக் கொள்ளாமல், அவர்களாகவே பொறுப்பை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்யும் இந்தப் பணி மெச்சிப் பாராட்ட வேண்டிய பணி. அந்த இடத்தைச் சுற்றிப் பார்வையிட்ட வண்ணம் சிறிது நேரம் பேசினோம்.

"'Polygons' என்ற பெயரில் இரு மாதங்களுக்கு ஒரு முறை வெளிவரும் ஓர் ஆங்கிலப் பத்திரிகையைச் சங்கத்தின் ஆதரவில் நடத்தி வருகிறீர்களே, எதற்கு? பத்திரிகை நடத்துவது மிகவும் செலவு வைக்கும் சிரமமான காரியமாயிற்றே?" என்று கேட்டேன்.

"அதற்கு நீங்களெல்லாம்தான் காரணம்" என்றார் கோபமாக ஒரு மாணவர்.

"நாங்களா?" என்று கேட்டேன் ஒன்றும் புரியாமல்.

"ஆமாம்; இளைஞர்களாகிய நாங்கள் பெரிய பத்திரிகைகளுக்குக் கதை எழுதி அனுப்பினால் அது பிரசுரமாவதில்லை. எங்களுக்கே திரும்பி வந்து விடுகிறது. எங்களுக்கென்று ஒரு சொந்தப் பத்திரிகை இருந்தால் எங்கள் கதைகளை நாங்கள் அதில் போட்டுக் கொள்ளலாம் இல்லையா?" என்று கோபம் தணியாமலே கேட்டார் அந்த மாணவர்.

'தர்க்க ரீதியில் இது ரொம்ப நியாயமான வாதம்தான்' என்று ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழி தென்படவில்லை எனக்கு.

"இன்னும் ஏதாவது சுவையாக....!" என்று கேட்டுவிட்டுத் தயங்கினேன்.

"...இருக்கிறது. பழைய சாமான்களை வீடு தோறும் சென்று சேகரித்து ஏழை மக்களுக்குக் கொடுக்கிறோம். சிறைச்சாலைக்கும் ஆஸ்பத்திரிக்கும் சென்று கைதிகளுக்கும் நோயாளிகளுக்கும் ஆறுதல் கூறுகிறோம்."

"இன்னும் ஏதாவது குறிப்பாக..." என்று நான் கேட்கும்போதே ஓர் இளைஞர் இடைமறித்து, "....குறிப்பாக நீங்கள் ஏதாவது எங்கள் இளைஞர் சங்கத்துக்குச் சொல்ல முடியுமானால் நாங்கள் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறோம்" என்று ஒரு போடு போட்டார்.

நான் யோசித்துப் பிறகு சொல்வதாகக் கூறித் தப்பித்துக் கொண்டேன்! –லோசமால்

# சித்திரத் தோற்றம் சிறப்பான நடனம்

இந்திரதனுஷ் ஆதரவில் மியூஸிக் அகாதமி அரங்கிலும், பார்த்தசாரதி ஸ்வாமி சபா ஆதரவில், அர்ச்சனா மேடையிலும் சமீபத்தில் நிகழ்ந்த பம்பாய்க் கல்லூரி மாணவி குமாரி சித்ரா சுந்தரத்தின் பரத நாட்டிய நிகழ்ச்சிகள் இரண்டும் உயர்ந்த வகையைச் சேர்ந்தவை. ஆட்டத்தில் விறுவிறுப்பும், கலை அழகும் நிரம்பியிருந்தது. நல்ல உயரமும் கம்பீரமான தோற்றமும், கவர்ச்சிகரமான பாவங்களைச் சுலபமாக அபிநயங்கள் மூலம் வெளிக்காட்டக்கூடிய அசாதாரண ஆற்றலும் சித்ரா சுந்தரத்தின் நடனங்களில் கண்டு களிக்க முடிந்தது. பம்பாய் மாநிலத்தில் பரதக் கலையைப் பரப்புவதில் சிறந்த தொண்டாற்றி வரும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பரதப் பள்ளியின் சிறந்த மாணவி சித்ரா சுந்தரம், பி.ஏ. பட்டத்துக்குப் படித்துக் கொண்டிருப்பதால் ஆங்கிலமும், அத்துடன் பிரெஞ்சு மொழியும் கற்றவர். கல்லூரி மேடையில் பேசியும், நடித்தும், அநுபவம் கூட உள்ளவர். இவ்வளவு சாதகமான பின்னணியுடன் பரதக் கலையைச் சம்பிரதாயமுறையில் கற்று அப்பியசித்ததினால், நிருத்தியமானாலும் அபிநயமானாலும் களை குன்றாது சாராம்சமான பாவங்களுடனும் கலை அழகுடனும் அவரால் ஆடிக் காட்ட முடிகிறது. அவருடைய ஆடலழகுக்கும் நடிப்புத் திறமைக்கும் ஏற்றவாறு அமைந்திருந்தது நிகழ்ச்சி நிரலும். நாராயணீய ச்லோகத்துடன் "ஹரி தும ஹரோ" என்ற மீரா பஜனும், பாரதியாரின் 'சின்னஞ் சிறு கிளியே' என்ற பாடலும் ஸிப்ரான என்ற பதமும் வெவ்வேறு மொழிகளில் வகைக்கு ஒன்றாக நிகழ்ச்சியில் இடம் பெற்றிருந்தன. மீரா பஜனில் பொதிந்துள்ள சகுனியின் சூதாட்டக் காட்சி, உயர்தர நடிப்புத் திறமையுடன், உணர்ச்சிப் பெருக்குடன் அபிநயிக்கப்பட்டதையும், நாராயணீய ச்லோகத்துக்குப் பிடித்த அபிநயங்களையும் விசேஷமாகப் பாராட்ட வேண்டும். நிருத்தியங்களும் நடனங்களும் பழுதின்றிக் கச்சிதமாக அமைந்திருந்தன. தெய்வீக மணம் கமழ்ந்த நடன நிகழ்ச்சி. குமாரி சித்ராவின் நடனங்களுக்கு அவருடைய தாயார் ஸ்ரீமதி பார்வதி சுந்தரம் பதங்கள் பாடியது உணர்ச்சியுடன் அழகாக இருந்தது. ஆங்கிலத்தில் ஒவ்வொரு உருப்படிக்கும் முன்னால் ரேடியோவில் அறிவிப்பாளர் பேசுவது போல் விளக்கம் சொல்லியது ஒருவேளை பம்பாய்க்குப் பொருத்தமாக இருக்கலாம்; ஆனால் சென்னையில் தமிழ் ரசிகர்கள் நிரம்பியிருந்த மன்றத்தில் அவசியமில்லாதது.



குமாரி சித்ரா சுந்தரத்தின் பரதநாட்டிய நிகழ்ச்சி அதைப் பார்த்தவர்கள் மனத்தில் பசுமையாகப் பதிந்திருக்கும்.

–எம். எஸ். சிவஸ்வாமி

# ராக்:போர்ட் பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது

நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்களின் பயனாக மேலும் செழுமையான பயிர்கள் நாட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிக்காக்க அங்கங்கே கிடங்குகள் தோன்றிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையையும், வலுவையும் தந்து, புரட்சிக்குப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்:போர்ட்.







## ராக்:போர்ட்

டால்மியா சிமெண்ட்







**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,**
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலைகள்:
டால்மியாபுரம், தமிழ் நாடு.
தலைமை அலுவலகம்: இந்தியா ஹவுஸ், புது டெல்லி-1.
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிட்.,
டால்மியாபுரம், தமிழ் நாடு.

# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்-
திலிருந்தும், அதனல்
நுண்ணிய கிருமிகளிட-
மிருந்தும் உங்களுக்கும்,
மற்றவர்களுக்கும் ஏற்படும்
சங்கடத்திலிருந்தும் பாது
காப் பளிக்கிறது.
ஜி-11 கலந்த
**சிந்தால் டாய்லெட் பவுடர்**
இந்தப் பாதுகாப்பைத்
தருகிறது. அதோடு...
அன்றலர்ந்த மலரின்
நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்—
துர்நாற்றத்தை அறவே
போக்கிப் பாதுகாப்பளிக்
கும் டாய்லெட் பவுடர்.**

Interpub/GSP-4/72 R Tam

**[சில ஆண்டுகளுக்கு முன்பெல்லாம் ஒருவர் ஓர் அரசியல் கட்சியை விட்டு நீங்கி வேறொரு கட்சியில் சேர்ந்தால் அஃதொரு பரபரப்பூட்டும் செய்தியாக இருக்கும். ஆனால் இன்றோ 'ஆயாராம், கயாராம்' என்று அலட்சியம் செய்யுமளவுக்கு இது சகஜமாகிவிட்டது! இந்நோய்க்கான காரணங்கள் பற்றியும் அதன் விரும்பத்தகாத விளைவுகள் பற்றியும் டாக்டர் ஏ. கிருஷ்ணஸ்வாமியிடம் வினவினோம்.]**

**அரசியல்வாதிகள் ஏன் அடிக்கடி கட்சி மாறுகிறார்கள்?**

இதற்கு நான்கு காரணங்கள் கூறலாம். 1. இப்போது ஒருவர் சார்ந்துள்ள கட்சிக்கு நல்ல எதிர்காலம் இல்லை; அதன் கொள்கைகள் காலத்துக்கு ஒவ்வாதவை என்று உணர்ந்து வேறொரு கட்சியில் சேர்ந்து ஜனநாயக முறையில் சமுதாயத்துக்குத் தொண்டாற்ற முடியும் என்ற நம்பிக்கை எழுந்ததன் விளைவாகக் கட்சி மாறுவது. 2. பதவியில் உள்ளவர்கள் ஆசை காட்டித் தங்கள் கட்சியில் சேருமாறு அழைப்பதற்கு இணங்குதல்...

இது கண்டிக்கத் தக்கது. ஏனெனில், ஏதோ ஒரு சுய லாபம் கருதியே மனச்சாட்சிக்கு விரோதமாகச் செயல்படுவதால், இச்செயல் கண்டிக்கத் தக்கது. மூன்றாவது, ஒரு குறிப்பிட்ட பெரும் பிரச்னை எழும்போது, கட்சியின் கொள்கைகளுடன் உடன்பாடு காண முடியாமற் போய்க் கட்சி மாறுவது. இதனைப் பொதுமக்கள் இகழ மாட்டார்கள். நான்காவது, குறிப்பிட்ட ஒரு கட்சியில் திட்டவட்டமான கொள்கைகள் இல்லாததால் அவ்வப்பொழுது அது பிற பிற மாற்றுக் கட்சிகளின் கொள்கைகளைப் பின்பற்றும். இது பிடிக்காமல் கட்சி மாறுவதும் உண்டு.

**கட்சி மாறுவதைத் தடுக்கும் வகையில் சட்டம் இயற்ற முடியாதா?**

திடீரென்று இரவோடு இரவாகக் கட்சி மாறுதல் நல்லதல்ல. கடந்த 4, 5 வருடங்களாகத்தான் இது அதிகமாக நிகழ்ந்து வருகிறது. இதைத் தடுக்கச் சட்டம் இயற்றினால், நியாயமான நேர்மையான காரணங்களுக்காகக் கட்சியை விட்டு வெளியேறுகிறவர்களையும் அது பாதிக்குமல்லவா? நம் நாட்டில் நிலவுகின்ற பிரத்தியட்ச நிலைமையைப் பாருங்கள். குழப்பம் மலிந்துள்ளது. அரசியலில் பலர் விரக்தி அடையும் நிலை ஏற்பட்டுள்ளது....

**இந்த நிலை மாற என்ன செய்யலாம்?**

கட்சிக்குள் கருத்து வேற்றுமைகளை எடுத்துரைக்க அனைவருக்கும் முழு சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும். மனித உணர்ச்சிகளை மதிக்கவும், சமுதாய நீதியைப் பாதுகாக்கவும் அங்கங்கே சில நிறுவனங்கள் உருவாகி இயங்க வேண்டும். இவை மக்களிடையே தைரியத்தை வளர்க்க உதவும். இன்று மனத்தில் தோன்றும் கருத்துக்களை எடுத்துரைக்கும் தைரியம் மக்களிடையே இல்லை என்பதை வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியுள்ளது.

**நீங்கள் கூறுவதுபோன்ற நிறுவனங்கள் படித்தவர்கள் மிகுதியாக உள்ள நகர்ப்புறங்களில் மட்டுந்தானே உருவாக முடியும்?**

முதலில் நகர்ப்புறங்களில் உருவாகட்டும். அதன் பின்னர் கிராமங்களுக்கும் அந்த இயக்கம் பரவும். ஒரு பள்ளி ஆசிரியர்கூட மக்கள் கடமையை எடுத்துச் சொல்லிப் பணியாற்றலாம். சுதந்திர உணர்ச்சி பரவுவதற்கு உதவலாம்.

**ஆசிரியர்கள் அரசியலில் ஈடுபடுவதாக முடியுமே?**

ஒரு பிரஜை என்ற முறையில் அவர் செயல்படலாமே? சமூக நீதிக்கு அவர்-

5




# அரசியலில் கட்சி மாறுதல்



தம் கடமையைச் செய்வதில் தவறில்லை. கட்சி அரசியல் அன்று அது. ஆசிரியர்கள் தொழிற் சங்கத்தில் சேர வேண்டும் என்று நான் சொல்லவில்லை. இந்நாட்டுக் குடிமகன் என்ற முறையில், சமுதாயத்தின் தார்மீக மதிப்புக்களை வலுப்படுத்த ஆசிரியர்கள் முன்வருவதில் தவறில்லை. பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளில் இம்மாதிரிக் கருத்தரங்குகளில் ஆசிரியர்கள் பங்கு பற்றுவது நியாயமானது என்று கருதப்படுகிறது. ஆசியாவில் நம் நாட்டின் முக்கியத்துவம் இன்று அங்கீகரிக்கப்பட்டுள்ளதால், தார்மீக, சமுதாய நீதிகளைப் பாதுகாக்கும் வகையில் பொதுஜன அபிப்பிராயம் உருவாக்கப்பட வேண்டும்.

**அதாவது, மக்கள் விழிப்புணர்ச்சியுடனிருந்து தவறான முறையில் கட்சி மாறும் அரசியல்வாதிகளைக் கண்டிக்க வேண்டும் என்கிறீர்கள், அப்படித் தானே?**

பத்திரிகைகளும் இதில் தீவிரமாகக் கவனம் செலுத்த வேண்டும். அறிவாளிகளின் செல்வாக்கும் கருத்துக்களும் வளரவும் பரவவும் வகை செய்ய வேண்டும். ஸ்வீடன், பிரிட்டன் முதலிய நாடுகளில் அறிவாளிகளின் குரலுக்கு நல்ல மதிப்பு உண்டு. தவறுகளைக் கண்டித்து எழுதுவது அங்கெல்லாம் அறிவாளிகளுக்குப் பழக்கமாகி விட்டது. நெறிக்குப் புறம்பான செயல்களைக் கண்டிக்கும் பழக்கம் அவர்களிடம் ஊன்றிப் போய்விட்டது. எனவே நன்னெறிகளைக் கைவிட்டுத் தான்தோன்றித்தனமாக அரசியல்வாதிகள் செயல்பட்டால் எளிதில் தப்பிவிட முடியாது.

**ஆனால் படித்தவர்களின் எண்ணிக்கை நம் நாட்டில் மிகக் குறைவாயிற்றே? மேலும் படித்தவர்கள் அரசியலில் ஈடுபடுவதையோ தொடர்பு கொள்வதையோ அவ்வளவாக விரும்புவதில்லையே?**

நம் நாடு ஆங்கில ஆட்சியை எதிர்த்துச் சுதந்திரப் போராட்டத்தில் இறங்கியபோது படித்தவர்களின் எண்ணிக்கை இன்றுள்ளதையும்விட மிகக் குறைவுதானே? மக்களுக்கு நெஞ்சு உரம் இருந்தது அன்று. நாட்டின் எதிர்கால நலனில் அக்கறையுள்ள அறிவாளிகள், படித்தவர்கள் பயந்து ஒதுங்கக் கூடாது. அவர்கள் உறுதியுடன் செயல்பட்டால், நாளடைவில் கிராமப்புறங்களில் உள்ளவர்களும் விழிப்புணர்ச்சி பெறுவார்கள். பிரான்சு நாட்டின் உதாரணத்தை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். அங்கு அறிவாளி வர்க்கம் அநீதியை எதிர்த்துப் போராடத் தயங்குவதேயில்லை. ஆந்திரே மால்ரோ முதலிய அறிவாளிகள் கிழக்கு வங்காளத்தில் பாகிஸ்தான் புரிந்த பயங்கர அட்டூழியங்களை வன்மையாகக் கண்டித்து எழுதி, உலகம் முழுவதும் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கியதை நினைவுகூர வேண்டும். அவர்களுடைய மன உறுதியையும், தைரியத்தையும் நாமும் பெற வேண்டும்.

**அறிவாளிகளின் விழிப்புணர்ச்சியின் மூலம் கட்சி மாறும் போக்கைத் தவிர்க்கலாம், அல்லது குறைக்கலாம் என்கிறீர்களா?**

நிச்சயமாக. இன்றுள்ள அரசியல் கட்சிகளின் நிலை கட்சி மாறுவதற்குத் தூபம் போடுவதாக அமைந்துள்ளது. ஒரு கட்சிக்கும் இன்னொரு கட்சிக்கும் அதிக வேறுபாடு இல்லை. ஒரு ரயில் நிலையத்தில் ஒருவர் வண்டியைத் தவற விட்டு விடுகிறார். ரயில் போனால் போகட்டும், பஸ்ஸில் போகலாமே என்று நினைக்கிறார் அவர். ரயில், பஸ் எல்லாமே ஒரே மாதிரிப் போக்குவரத்துச் சாதனந் தானே என்று கருதுகிறார். அதே மாதிரிதான் அரசியல் கட்சிகள் பலவும் உள்ளன. ரயிலுக்கும் பஸ்ஸுக்கும் எப்படி வேறுபாடில்லை என்று அந்தப் பிரயாணி கருதுகிறாரோ, அப்படியேதான் ஒரு கட்சிக்கும் இன்னொரு கட்சிக்கும் கொள்கை அளவில் வேறுபாடு இல்லை என்ற நிலை. கோஷங்கள் வேண்டுமானால் வேறுபடலாம். எல்லாக் கட்சிகளுமே சோஷலிசம் பேசுகின்றன. எந்தக் கட்சியில் இருந்தால் என்ன என்று அரசியல்வாதி நினைக்கிறான். கட்சி மாறுகிறான். வர்னர் என்ற சோஷலிஸ்ட் அறிஞர் கூறுகிறார்: "பிரிட்டன், பிரான்ஸ், ஸ்வீடன் நாடுகளில் பரம்பரையாக வழக்கிலுள்ள சோஷலிச முறைப்படி **சோஷலிசத்தின் அடிப்படைக் குறிக்கோள், தனியார் சொத்து ஏதும் வைத்துக் கொள்ளக் கூடாது என்பதல்ல; ஜனநாயகத்தின் விஸ்தரிப்பே.** துரதிர்ஷ்ட வசமாக இந்த உண்மை வலதுசாரி, இடதுசாரியினரின் தீர்மானமான கருத்துக்களால் இருட்டடிப்புச் செய்யப்பட்டுள்ளது."

**ஒருவர் தம் கருத்துக்களை அச்சமின்றி எடுத்துரைக்கப் போதிய சுதந்திரம் பெற்றிருந்தால் அவர் கட்சி மாறும்படியான அவசியம் நேராது என்பது உங்கள் உறுதியான அபிப்பிராயம் இல்லையா?**

ஆம்; பெருமளவுக்கு அதைத் தவிர்க்கலாம். சர் ஸ்டாஃபோர்ட் கிரிப்ஸ் ஜமைக்காவுக்கு அரசியல் அமைப்பை உருவாக்கித் தந்தவர். சோஷலிஸ்ட் கட்சிக்குள் ஒரு புரட்சிக்காரர். அவரைக் கட்சியிலிருந்தே வெளியேற்றினார்கள். ஆனால் அவரே பின்னர் மந்திரியாகிச் சிறப்பாகத் திகழ்ந்தார். 'இந்தியா கவர்ன்மெண்ட் மசோதா' பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் கொண்டு வரப்பட்டபோது சர்ச்சில் அதனை வன்மையாக எதிர்த்தார். 1935ல் ஹிட்லருக்கு எதிராக அவர் ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்தபோது அவருக்கு மெஜாரிட்டி பலம் இருக்கவில்லை. மைனாரிட்டியாக இருந்தும் துணிச்சலுடன் தம் கருத்தைத் தெரிவித்தார். அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றவில்லை. அவரும் வெளியேறவில்லை. கருத்துச் சுதந்திரம் மட்டும் அவருக்கு இருந்திராவிடில் அவர் கட்சியை விட்டு விலக நேர்ந்திருக்கலாம். வேறு கட்சியிலும் சேர்ந்திருக்கக் கூடும். எனவே கட்சிக்குள் கருத்துச் சுதந்திரம் அவசியம். உயர் மட்டத்தில் மனச்சாட்சியை மதித்தும், தார்மிக உணர்வுகளுக்கு மதிப்பளித்தும் நடந்துகொள்ள வேண்டும். அறிவாளிகள் ஒதுங்கியிராமல், தங்கள் கருத்துக்களை எடுத்துரைத்துச் சமுதாய நீதியை நிலைநிறுத்தப் பாடுபட வேண்டும். இவை மூலமே கட்சி மாறும் கூத்து அதிகம் நிகழாமல் தவிர்க்கலாம். சட்டத்தின் மூலம் இதை அமுல் செய்வதில் நான் முன் சொன்ன இடைஞ்சல்கள் உள்ளன. **பேட்டி: பாணன்**




சிறப்பாக வாழ சீரான பொருள்களைப் படைக்கிறோம். சிறப்பான வாழ்க்கையை மேலும் சிறக்கச் செய்வது பாரிவேர். உங்கள் ஸ்நான அறைக்கு ஏற்ற சாதனங்கள் பாரிவேரில் உள்ளன. எளிதில் அடையக் கூடியவை.

புது மனையா அல்லது வீட்டைப் புதுப் பிக்கிறீர்களா? உங்கள் ஸ்நான அறையை அழகின் இலக்கணமாக மாற்றுகிறது பாரிவேர்.

மென்மை, கவர்ச்சி, உறுதி, உழைப்பு ஒருங்கே அமைந்த பாரிவேர் முத்துப் போன்ற வெண்மை நிறத்திலும் மற்றும் பிங்க், பிரிம்ரோஸ், டர்க்காயிஸ் நீலம், ஆகாய நீலம், இளம் பச்சை, மிஸ்ட் கிரே போன்ற மென்மையான வண்ணங்களிலும் கிடைக்கிறது.

- வழவழப்புடன் கூடிய பளபளப்பு
- நீரை உறிஞ்சாதது
- விரிசல் விழாதது
- முற்றிலும் சுகாதாரமானது

இந்தியாவின் மிகப் பெரிய ஸெராமிக் தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு, அகில உலகப் புகழ் பெற்றது

ஐ.எஸ்.ஐ. மற்றும் டி.ஜி.எஸ். அண்ட் டி. பட்டியல்களில் இடம் பெற்றிருப்பது

டிஸைன் இன்டெக்ஸுக்கான யு.கே. கவுன்ஸில் ஆஃப் இன்டஸ்ட்ரியல் டிஸைன் நிறுவனத்தின் பட்டியலில் இடம் பெற்றிருப்பது

**ஈ.ஐ.டி. – பாரி லிமிடெட்**
ராயல் டௌல்டன்ஸ், யு.கே.யின்
தொழில்நுட்ப ஆலோசனை கொண்டது
டேர் ஹவுஸ், சென்னை-1

**Parryware**
**VITREOUS**

*உயர்முறை வாழ்க்கைக்கு உகந்தது பாரிவேர் விட்ரியஸ்*

# ஹென்ருல்

## மீண்டும் கிடைக்கிறது

**வெகுகாலமாகவே அமோகமாக விற்பனையாகி வரும் கேசத்தை கருமையாக்கும் சாதனம். உங்கள் கேசத்தை இயற்கையான மற்றும் நிரந்தரமான கருமையுடனும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.**

உடல்நலக் குறைவினால் ஏற்படும் இளமை நரையைப்பற்றியோ, அல்லது வயோதிகத்தில் ஏற்படும் நரையைப்பற்றியோ கவலையடைய வேண்டாம். ஹென்ருல் தற்போது உங்களுக்கு மீண்டும் கிடைக்கிறது. அது உங்களது கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிப்பதுடன், பூரண ஆரோக்கியத்துடன் இளமையான தோற்றத்தை அளிக்கிறது.

கேசத்தின் அடி வேர்களுக்கு போஷாக்கு அளித்து, செழிப்பாக வளரவும், காலக்கிரமத்தில் கேசம் இயற்கையான கருமையுடன் கூடியதாக இருக்க உதவுமாறும், அனேக பொருட்கள் சேர்த்து தயாரிக்கப்படுவது ஹென்ருல்.

சாதாரணமாக கடைகளில் கிடைக்கும், கேசத்தை கருமையாக்கும் இதர சரக்குகளை போல அல்ல, ஹென்ருல். இது தனித்தன்மை வாய்ந்தது.

1. நிரந்தரமாக நரையை தடுப்பதுடன், உங்களைப் பல வருடங்கள் இளமையான தோற்றத்துடன் விளங்கச் செய்கிறது.

2. இயற்கையான கருமையுடன் செழிப்பாக புது கேசம் வளர உதவுவதோடு, அதை வலுவடையவும் செய்கிறது.

**ஹென்ருல் உபயோகிக்கும் முறை:**

ஹென்ருலில் உள்ள, கேசத்துக்கு போஷாக்கு அளிக்கும் சத்துக்கள் கேசத்தின் வேர்க்கால்களில் நன்கு ஊறி, கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிக்க வேண்டி, போதிய கால அவகாசம் அளிக்க வேண்டும். மூன்று மாத காலம் போதுமானது. இந்தக் கால கெடுவில் கேசம் இயற்கையான கருமை நிறத்தை அடைகிறது. ஹென்ருல், கேசத்தை கருமையடையச் செய்வது மட்டுமல்ல, அது கேசத்திற்கு போஷாக்கும் அளிக்கிறது. கேசத்தை அழகுறச் செய்ய மிகவும் முக்கியமான சாதனம்.

ஹென்ருலை உபயோகிக்க ஆரம்பித்த ஒரு சில வாரங்களிலே ஒரு புதிய மாறுதலைக் காண்பீர்கள். இதற்கு முன்பு காணப்படாத ஒரு பளபளப்புடன் உங்களது கேசம் பிரகாசிக்கும். உங்களது நண்பர்கள் உங்களைக் கண்டு பிரமித்துப் போவார்கள். உங்கள் தன்னம்பிக்கையின் சக்தி வளர்ந்து பல மனிதர்களையும், விஷயங்களையும் நிர்வகிக்கும் திறமையைப் பெறுவீர்கள். எவ்வளவு வயது அடைந்தவராக இருப்பினும், ஹென்ருல் கைவசமிருந்தால் கவலை வேண்டாம். உங்களது தொழிலில் மற்றும் சமூகத்தில் வெற்றி வாய்ப்பு நிச்சயம்.

உங்களது கேசம் தொடர்ந்து கருமையாக இருக்க ஹென்ருலை வழக்கமாக உபயோகியுங்கள். நீங்கள் தேர்ந்து எடுக்க மூன்று ரக ஹென்ருல் உள்ளன. ஹென்ருல் (எண்ணெய்) ஹென்ருல் (பசையற்றது) ஹென்ருல் பொமேட். இந்த மூன்று ரகங்களும், யாவருக்கும் ஏற்றவாறு, வாசனை சேர்க்கப்பட்டுள்ளது. ஹென்ருல் (எண்ணெய்) வறட்சியான, மற்றும் குத்திட்ட கேசத்திற்கு விசேஷமாக ஏற்றது. நீண்டகால நரைக்கு நல்ல பலனளிக்கக் கூடியது ஹென்ருல் பொமேட்.

நல்ல பயனை அடைய தலையை சுத்தமாகக் கழுவ வேண்டும். வாரம் இருமுறை பியர்லென் பாரிஸின் விசேஷ தயாரிப்பான ஸில்கோ ஹேர் ஷாம்பு போட்டுத் தலையை சுத்தம் செய்யுங்கள்.

இன்றே ஹென்ருல் வாங்குங்கள். வருங்காலத்தில் இளமையுடன் விளங்குவீர்கள்.

**தயவுசெய்து கடிதப் போக்குவரத்தை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்**

**ஹென்ருல் தயாரித்து வெளியிடுபவர்கள்:**

**பியர்லென் - பாரிஸ் பிரைவேட் லிமிடெட், தபால் பெட்டி எண் 493, பம்பாய்-1**

---

# அருங்கலை விநோதர்

"கல்லையும் தீயையும் சேர்த்து — நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்து!
தெள்ளு தமிழ்ப் புலவர்கள் — நல்ல
தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்....."

'தேனின் இனிமையும், தீயின் கனலும், நல்ல காற்றின் சுகமும், வானவெளியின் பரப்பும், ஆழமும் கொண்டதுதான் கவிதை' என்று பாரதியார் கவிதையைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

மறுமலர்ச்சி பெற்று வரும் தமிழ் மொழிக்குக் கவிதைகளாலும், உரை நடையாலும் அருந்தொண்டாற்றி வரும் அருங்கலை விநோதர் திரு பெரியசாமித் தூரன் அவர்களின் கவிதைகள் பாரதியார் கூறியிருக்கும் கவிதை இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழ்பவை. அவர் கவிதைகளில் அழகையோ, இனிமையையோ தேடி அலைய வேண்டியதில்லை; ஆற்றங்கரை ஊற்றில் சுரக்கும் புதுப்புனல் போல் அவை பொங்கி எழும்.

"நெஞ்ச மெனும் பாற் கடலில்
நிமிர்ந்து வரும் திரை வடித்தும்
பிஞ்சு நிலாக் கிண்ணமிலே
பெய்து வைத்தேன் கவியமுதம்"

இந்த வரிகளில் கவிதை பொங்கியெழுவதை நன்கு காணலாம்.

"ஆடியெழும் நாகமதை அடிமிதிக்கும் காலம்
அளவில்லா உயர் எண்ணம் அலை வீசும் காலம்
தேடரிய கலைகளெல்லாம் நாடுகின்ற காலம்
தீஞ்சுவைசேர் கவிக்கனவில் சிறந்திருக்கும் காலம்"

இந்தப் பாட்டை யார் படித்தாலும் இளமைத் துடிப்பு அவர்களுக்குத் தானே வந்துவிடும். இளமைப் பருவத்தின் துடிப்பைக் கூறும் கவிஞர் அந்த இளமைக் கனவின் சிறப்பையும் அழகாகக் குறிப்பிடுகிறார்.

ஆனால் இளைஞன் அந்தக் கனவிலேயே லயித்திருந்துவிட்டால் நாட்டின் கதி என்னவாகிறது? ஆகவே,

"இளைஞனே எழுந்து நில்
தளையெலாம் இன்றே தகர்த்திடு;
அரியவும் பெரியவும் புரிய வந்தவன்நீ
இளைஞனே எழுந்து நில்"

..........................

"சோம்பலும் சோர்வும்
போம்படி தோளினைப் புடைத்திடு
வானையும் பிளந்திடும் வன்மை கொண்டவன் நீ
இளைஞனே எழுந்து நில்"

என்று வீர முழக்கம் செய்து இளைஞர் சமுதாயத்தை எழுப்பி அவர்கள் சோர்வைப் போக்கி நாட்டுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை நினைவூட்டி, அவர்கள் சக்தியை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி வீறுகொண்டு எழச் செய்கிறார் கவிஞர்.

தமிழிசைக்குத் தூரன் அருந்தொண்டாற்றியிருக்கிறார். தமிழ் இசைப் பாடல்கள், இசைமணி மாலை, கீர்த்தனை மஞ்சரி முதலிய அவரது இசை நூல்கள் தமிழிசை இயக்கத்தின் எழுச்சியாக வெளிவந்தன. இசைக்கலையில் தேர்ச்சி பெற்றுள்ள திரு பெ. தூரன் சுர, தாளக்குறிப்புக்களுடன் இந்நூல்களை வெளியிட்டுள்ளார். மேற்படி இசை



நூல்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பரிசு பெற்றவை.

"ஸ்ரீ தூரன் ஒரு கவிஞர். அவருடைய இதயம் தாய்மையானது; இசை மயமானது. ஆகையால் பாடல்களில் இயற்கையாகவே தமிழ் வளமும் இசையும் ஊடுருவி நிற்கின்றன" என்று பேராசிரியர் கல்கி அவர்கள் 'கீர்த்தனை மஞ்சரி'யின் முன்னுரையில் கூறுகிறார்.

திரு பெரியசாமித் தூரன் கோவை, பெரியநாயக்கன் பாளையத்தில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயத்தில் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் பதினைந்து ஆண்டுகள் பணி

யாற்றினார். இளமை முதலே இவர் கவிஞர். சிறுகதைகளும் நிறைய எழுதியிருக்கிறார்.

கணிதமே இவருடைய பட்டப் படிப்புத் துறையென்றாலும், தமிழிலும், உளவியலிலும், இசையிலும், ஓவியத்திலும் விசேஷ கவனம் செலுத்திப் பயிற்சி பெற்று வல்லுநரானார்.

''பள்ளி உபாத்தியாயராக இருந்த தங்களுக்கு, எழுத்துத் துறையில் ஆர்வம் எப்படி ஏற்பட்டது?''

'' என் மாணவப் பருவத்திலேயே, அதாவது 1927ம் ஆண்டிலேயே 'பித்தன்' என்ற மாதச் சஞ்சிகையோடு தொடர்பு கொள்ளும் அரிய வாய்ப்புக் கிட்டியது. தமிழ்த் தென்றல் திரு வி. க. அவர்களின் சாது அச்சகத்தில்தான் அது அச்சாகியது. ஆகவே, திருவி.க. 'பித்தன்' பத்திரிகையை அச்சிடுபவராயிருந்தார்; நான் வெளியிடுவோனாயிருந்தேன். ஆசிரியர் குழு ஒன்று இருந்தது. டாக்டர் எல். கே. முத்துசாமி, திரு ஓ. வி. அளகேசன், திரு கே. எஸ். பழனிசாமி ஆகியவர்கள் அக்குழுவில் இருந்து பணியாற்றினர். அப்பொழுதுதான் எனக்கு எழுத்தில் ஆர்வமும் பத்திரிகைத் தொழிலில் ஒரு பற்றும் ஏற்பட்டன. 'பித்தன்' பத்திரிகைக்கு ஆயிரத்து நானூறு சந்தாதாரர்கள் இருந்தனர். இது அந்த நாளில் மிகப் பெரிய சாதனை.''

'பித்தன்' பத்திரிகை மூலமாகத்தான் தூரனுக்கு ராஜாஜி அவர்களுடன் தொடர்பும், கல்கி அவர்களின் நட்பும் கிடைத்தது.

ராஜாஜி எழுதியிருந்தார்: ''காரணம் கேட்டால் என்னால் சொல்ல முடியாது. நான் பித்தன் மேல் மோகம் கொண்டுவிட்டேன்!'' — இக்கடிதம் இவருக்குத் தந்த உற்சாகத்தைச் சொல்லி முடியாது.

கல்கி அவர்களின் 'சாரதையின் தந்திரம் முதலிய கதைகள்' என்ற நூலுக்குப் 'பித்தன்' இதழில் 'ப' என்ற புனைபெயரில் திரு தூரன் அவர்கள் ஒரு விமரிசனம் எழுதியிருந்தார். இதற்காகவே பல ஆங்கில நூல்களைப் படித்துத் திறனாய்வுக் கலையை வளர்த்து வைத்திருந்த அவர் அந்நூலுக்கு எழுதிய விமரிசனம் சிறப்பாக அமைந்திருந்தது. திரு வி. க. அவர்களே பாராட்டினார்கள். அந்தப் பெருமிதத்தில் மிதந்து கொண்டிருந்த இவருக்குக் கல்கி அவர்களிடமிருந்தும் விமரிசனத்தைப் பாராட்டிப் ''பித்தன்'' காரியாலயத்துக்கு ஒரு கடிதம் வந்தது. அதில், விமரிசனம் எழுதியவரைப் பார்க்க வேண்டும் என்று எழுதியிருந்தார்.

மேற்படி நிகழ்ச்சியை விவரித்துவிட்டுத் திரு தூரன் கூறினார்: ''அவரிடமிருந்து கடிதம் வந்த இரண்டொரு தினங்களில், 'ஆனந்தவிகடன்' காரியாலயத்தில் கல்கி அவர்களைச் சந்தித்தேன். அந்தச் சந்திப்பு என்றுமே மறக்க முடியாதது. 'சாரதையின் தந்திரம் முதலிய கதைகள்' பற்றிய விமரிசனத்தில் அந்தக் கதைகளைப் பற்றிய சில குறைபாடுகளையும் கூறி விளக்கியிருந்தேன். கல்கி அவர்கள் அதைப் பெருமதிப்போடு ஏற்றுக் கொண்டு, 'உங்களுக்குச் சரியென்று தோன்றியதை மனம் விட்டுப் பாராட்டிக் குறைகளையும் எடுத்துக்காட்டியிருக்கிறீர்கள். இதுதான் எனக்குப் பிடித்த விமரிசனம்' என்றார். அன்றைய தினத்திலிருந்து நாங்கள் இருவரும் மனம் ஒத்த நண்பர்கள் ஆனோம். அவரது இறுதி மூச்சு வரையில் கல்கி அவர்கள் என்னிடம் அதே விசுவாசத்துடன் பழகினார்.'' இதைக் கூறும்போதே திரு பெ. தூரன் அவர்களின் கண்களில் கனிவும் கசிவும் கண்டது.

திரு பெ. தூரன் அவர்கள் சங்கீதத்தில் மிகவும் ஆர்வம் உள்ளவர். இவருடன் படித்த மாணவர்களெல்லாம் சினிமாப் பார்க்கப் போனாலும் இவர் மட்டும் சங்கீதக் கச்சேரி கேட்கப் போய்விடுவாராம். சங்கீதத்தில் அவ்வளவு ஆர்வம் இவருக்கு இருந்ததற்குக் காரணம், இவருடைய சிற்றப்பா சங்கீத ஞானம் உள்ளவராயிருந்ததுதான். அவர் கோபாலகிருஷ்ண பாரதியாரின் கீர்த்தனங்களை மிக நன்றாகப் பாடுவார். ஸ்ரீராம கிருஷ்ணய்யர் என்னும் சங்கீத வித்வானிடம் பத்து ஆண்டுக் காலம் சங்கீதம் பயின்றவர் திரு பெ. தூரன். இந்தப் பயிற்சிதான் கீர்த்தனங்கள் இயற்றுவதற்கு அவருக்கு ஆதார கருவியாய் அமைந்தது. தமிழ்ப் புலமையோடு இசைப் புலமையும் ஒன்று சேரவே, அவரது கீர்த்தனங்கள் சிறப்பியல்பைப் பெற்றுவிட்டன.

திரு பெ. தூரன் அவர்கள் ஐம்பத்தைந்து நூல்கள் எழுதியிருக்கிறார். ''இளந் தமிழா'', ''மின்னல் பூ'', ''நிலாப் பிஞ்சு'' ஆகியவை கவிதைகள். ''பட்டிப் பறவைகள்'' கவிதைத் துணுக்குகள் — சிந்தனைக்கு விருந்தளிக்கும் நூல். இவை தவிர, நாடகங்கள், குழந்தைப் பாடல்கள் நிறைய எழுதியிருக்கிறார்.

''தாழ்வு மனப்பான்மை'', ''மனமும் அதன் விளக்கமும்'', ''அடிமனம்'', ''குழந்தை உள்ளம்'', ''குமரப் பருவம்'' ஆகிய நூல்கள் உளவியலை அடிப்படையாகக் கொண்ட ஆராய்ச்சி நூல்கள்; தமிழ் மொழிக்கு மாண்பு சேர்க்கும் மகத்தான நூல்கள்.

கோவை, பெரிய நாயக்கன் பாளையம், ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயத்தில் தலைமை ஆசிரியராயிருந்த திரு பெரியசாமித் தூரனுக்கு, சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்க் கலைக் களஞ்சியம் ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பு எப்படிக் கிட்டியது என்பது மிகவும் சுவையான விஷயம்.

தமிழ்நாடு அரசின் முன்னாள் கல்வி அமைச்சர் திரு தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்களின் பெருமுயற்சியால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ்க் கலைக் களஞ்சியத்துக்கு ஆசிரியராக யாரை நியமிக்கலாம் என்ற பிரச்னை வந்தபோது திரு செட்டியார் அவர்களிடம் பேராசிரியர் கல்கி அவர்கள்தான் திரு பெ. தூரனைச் சிபாரிசு செய்தாராம். ''இந்தப் பதவிக்குத் தகுந்த ஆசாமி பெரியசாமித் தூரன்தான். தூரன் அவர்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு வெகுதூரத்தில் உள்ளவர்களை எல்லாம் தேடுகிறோமே!'' என்று கல்கி அவர்கள் கூறியதும், திரு செட்டியார், 'அவரை இங்கே வரவழைத்துவிட்டால் வித்யாலயப் பொறுப்பை வேறு ஒரு தகுந்த நபரிடம் ஒப்படைக்க வேண்டும்.

அதனால்தான் யோசிக்கிறேன்......" என்றாராம்.

ஆனால், கடைசியில் திரு பெ. தூரன் அவர்களே அப்பதவியை ஏற்க நேர்ந்தது. பல ஆண்டுகள் முயன்று கலைக் களஞ்சியம் பத்துத் தொகுதிகள் வெளிவந்த பிறகு இப்பொழுது இவர் குழந்தைகள் கலைக் களஞ்சியத்தின் தலைமை ஆசிரியராகத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தில் பணியாற்றுகிறார்.

திரு பெரியசாமித் தூரன் அவர்களின் இலக்கியத் தொண்டின் பெருமையைக் குறிக்கும் நூல் ஒன்று வெளிவந்திருக்கிறது. அது "பாரதி தமிழ்" என்ற நூல். மறைந்து கிடந்த பாரதியின் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றை அரும்பெரும் முயற்சி எடுத்து, எழுநூறு பக்கங்கள் கொண்ட நூலாகத் தொகுத்திருக்கிறார். 1905ம் ஆண்டு முதல் 1921ம் ஆண்டு வரையில் "சுதேசமித்திரன்" பத்திரிகை நாளிதழ்களையெல்லாம் பொறுமையாகப் படித்து ஆராய்ந்து வெளியிடப்பட்ட மிக மிக அரியநூல். இந்நூலின் அருமையை உணர்ந்து சென்னை எழுத்தாளர் சங்கம் திரு பெ. தூரன் அவர்களுக்குத் தங்கப் பதக்கம் வழங்கிப் பாராட்டியது.

இன்னொரு சுவையான விஷயம். முதல் முதல் பொங்கல் வாழ்த்து எழுதி அனுப்பும் வழக்கம் 1928ம் ஆண்டில்தான் ஆரம்பமாயிற்று. அப்பொழுது திரு பெ. தூரன் கல்லூரி மாணவர். மாணவர்கள் பொங்கலன்று வாழ்த்து அனுப்பத் தீர்மானித்தனர். திரு தூரன் அவர்கள் ஒரு பனை ஓலை நறுக்கில் பேனாவினால் அழகாக வாழ்த்தொன்று எழுதினார். அது பல முக்கியமானவர்களுக்கு அனுப்பப்பட்டது.

இந்தப் புதுமை பற்றி அந்த நாளில் "நவசக்தி"யில் ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது. 'பொங்கல் திருநாள் தமிழர் திருநாள். அந்த நன்னாளில் ஒருவருக்கொருவர் நல்வாழ்த்துத் தெரிவித்துக்கொள்வது தமிழர் மரபு' என்ற கருத்து தொனிக்க வெளியிடப்பட்ட அந்த அறிக்கையில் தமிழறிஞர் உயர்திரு கா. நமச்சிவாய முதலியார், திரு. வி.க., 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி ஆகிய மூவரும் கையெழுத்திட்டிருந்தனர். இது அந்த நாளில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது.

பல துறைகளிலும் சிறப்பாகத் தமது படைப்பாற்றலை வெளிப்படுத்திப் பாராட்டுகளும், விருதுகளும், பட்டயங்களும் பெற்றிருக்கும் திரு தூரனை 'பத்மபூஷண்' விருது வழங்கி மத்திய அரசு பெருமைப்படுத்தியது. பட்டமும், பதவியும் பெற்றிருந்தும் அடக்கமும் எளிமையும், இனிமையும் நிரம்பியவர்; முருகப் பெருமானிடம் மாறாத நேயம்பூண்டவர். அண்மையில், இவரது மணிவிழா ஆடம்பரம் எதுவும் இல்லாமல், பழனி ஆண்டவர் சந்நிதியில் குடும்பத்தினர் மட்டும் இருக்க நடந்தது.

குழந்தை வேலன் அருளால், திரு பெரியசாமித் தூரன் இன்னும் பல்லாண்டுகள் ஆரோக்கிய திடகாத்திரராக வாழ்ந்து தமிழுக்குச் சேவை செய்ய வேண்டும். —சாந்தன்

---



சென்னை நேதாஜி சுபாஷ் சாலையில் 'குறளகம்' இரண்டாம் மாடியில் 2 லட்சம் ரூபாய் செலவில் 'கோ ஆப் டெக்ஸ்' விற்பனை நிலையம் நவீனத் தோற்றத்துடன் பொலிகிறது. க்ரைட்டீரியன் விளம்பர ஸ்தாபனத்தார் ஒரு மாதத்துக்குள் இந்த அழகிய நிலையத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.

விற்பனை நிலையங்களை இம்மாதிரி அழகு படுத்தினால் லட்சக் கணக்கில் விற்பனை கூடுகிறது என்கிறார் 'கோ ஆப் டெக்ஸ்' விசேஷ அதிகாரி. கைத்தறி வாரத்தின்போது விற்பனை ஐம்பது லட்சம் ரூபாய்க்குமேல் நடந்ததாம்.

□



திரைப்படப் பின்னணி இசை வழங்குவதில் கடந்த கால் நூற்றாண்டாக திரு டி. எம். சௌந்தரராஜன் அவர்கள் ஆற்றியுள்ள அரும் பணியை மெச்சும் விதமாக கிராமஃபோன் கம்பெனி ஒரு விழா நடத்தியது. வெள்ளி விழா கண்ட திரு டி.எம்.எஸ். அவர்களை, திரு ஏ. வி. மெய்யப்பனும், முதலமைச்சர் திரு கருணாநிதியும் பாராட்டினர்.




"பொழுது போகாமல் தவிக்கிறேன் சுவாமி. அதிகச் செலவின்றி அறிவூட்டும் பொழுதுபோக்கு ஏதாவது தெரிந்தால் சொல்லுங்களேன்!"

"புதைபொருள் ஆராய்ச்சி உங்கள் நேரத்தைச் செலவிடச் சரியான பொழுதுபோக்கு. நீங்கள் வெற்றிகரமான புதைபொருள் ஆராய்ச்சியாளராக விரும்பினால் மண்வெட்டி பிடிக்க வேண்டும். ஆனால் நினைத்த இடத்தில் தோண்டலாம் என்று எண்ணாதீர்கள்! பழைமைப் பொக்கிஷங்கள் மண்ணில் புதையுண்டு கிடக்கும் இடம் தேடிப் போக வேண்டும். இதற்குச் சிறிது விஞ்ஞான முறைப்படி ஆராய்ச்சி அறிவு தேவை.

"உங்கள் கிராமத்திலோ நகரத்திலோ பல பழம் பெரும் ஆராய்ச்சியாளர்கள் இருப்பார்கள். அந்தக் கிராமத்தின் தொன்மை பற்றி விரிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். பிறகு பழம் பெருமையை விளக்கும் இடத்தைத் தேர்ந்தெடுத்துத் தோண்டத் தொடங்குங்கள். உங்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால் பழம் பொருள்களுக்குப் பதில் புதையலே கிடைக்கலாம்! ஒன்றுமில்லாவிட்டால் தோண்டியதனால் உங்களுக்குச் சரியான உடல் பயிற்சியாவது நிச்சயம் ஏற்படும். உங்களுக்குத் தேவைப்படும் உபகரணங்கள் ஒரு மண் வெட்டி, பிரஷ், கடப்பாரை ஆகியவைதான்!

"உங்கள் வீட்டுக்குப் பின்னால் ஆராய்ச்சியைத் தொடங்கினால் நல்லது என்று உங்கள் மனைவி யோசனை சொல்லலாம்! அப்படித் தோண்டிய இடத்தில் விதைகளை ஊன்றி வைத்தால் ஒரு காய்கறித் தோட்டமே உருவாகிவிடுமல்லவா?"

"ரொம்பச் சிரமமான பொழுதுபோக்காக இருக்கிறதே. ஏதாவது சுலபமாகச் சொல்லப்படாது?"

"நீங்கள் சைவமா, அசைவமா?"

"எதற்காகக் கேட்கிறீர்கள்?"

"நீங்கள் அசைவமானால் பொழுது போக்கில் ஈடுபடும்போதே உணவு தேட ஒரு வழி உண்டு!"



"சொல்லுங்களேன்!"

"ஒரு தூண்டில் வாங்கிக் கொண்டு குளமோ, குட்டையோ, நதியோ தேடிப் போய்த் தூண்டில் போடத் தொடங்கினால் பொழுதும் போகும், உங்கள் உணவுக்குத் தேவையான மீன்களும் கிடைத்துவிடும்!"

"தூண்டில் போட யாருக்கு ஸார் முடியும்! வேறு இலகுவான வழிகளைச் சொல்லுங்களேன்!"

"ஆஹா! கிராமமோ, நகரமோ மரங்கள் அடர்ந்த தோட்டங்களுக்குப் போய் விதம் விதமான பறவைகளைப் பார்த்துக்கொண்டே பொழுதைப் போக்கி விடலாம்! இதற்குப் பெயர் Bird watching."

"எல்லாப் பறவைகளையும் தோட்டங்களில் காண முடியுமா?"

"அதற்கும் இடமிருக்கிறது. பறவை சரணாலயங்கள் பல இருக்கின்றன. வேடந்தாங்கல் தெரியுமே உமக்கு!"

"பறவை நோக்கலுக்கு எந்த விதமான உபகரணங்களும் தேவையில்லையா?"

"உம்ம கண்களுக்குச் சரியான பார்வை இருந்தால் ஒன்றும் வேண்டாம்! பைனாகுலர் எதற்கும் கையில் வைத்துக் கொள்ளலாம். குறிப்பெடுக்க ஒரு நோட்டும் பென்சிலும் தேவை."



"அவ்வளவு அதிசயமான விஷயங்கள் பறவை பார்த்தலில் இருக்கின்றனவா?"

"ஓ! பறவைகளின் விதம், அவைகளின் வண்ணங்கள், குரலோசை – இப்படி ஆராய்ச்சியை மேற்கொண்டால் நீங்கள் பறவை சாஸ்திரத்தில் 'எக்ஸ்பர்ட்' ஆகிவிடுவீர்கள்!"

"இருக்கட்டும், வேறு ஏதாவது...?"

"உங்களுக்கு நீச்சல் தெரியுமா? படகுக்குத் துடுப்புப் போடத் தெரியுமா? படகு செலுத்துதல் ஒரு பிரமாதமான பொழுதுபோக்கு. இதற்கென்று படகுக் கிளப்புகளே இருக்கின்றன. அங்கே போய்ச் சேர்ந்து படகு விடக் கற்றுக் கொண்டீரானால் பொழுது போதாது என்று நினைப்பீர்!"

"ரொம்பச் செலவாகுமே?"

"அப்படியா? செலவாகாத ஒரு பொழுது போக்குச் சொல்லட்டுமா?"

"சொல்லுமே!"

"கடற்கரை ஓரமாக நடந்து செல்லுங்கள். அங்கே பற்பல நிறங்களில் கற்களை அலைகள் அடித்துக் கொண்டு வந்து தள்ளியிருக்கும். அவற்றைப் பொறுக்கிச் சேர்க்கலாம். அவை கிடைக்காவிட்டால் அழகழகான கிளிஞ்சல் வகைகளைச் சேகரிக்கலாம்!"

"கடற்கரை வரைக்கும் யார் போய்த் தேடுவது?"



''அதுவும் கஷ்டமா? சரி, உம்ம தோட்டத்தில் உள்ள பலவகை மலர்களைச் சேகரித்து, அவைகளை இரு சட்டங்களுக்கு இடையில் வைத்து 'பிரஸ்' செய்து அவை என்னென்ன வகைப் பூக்கள் என்று எழுதி வையுமே!''

''அதெப்படி முடியும்? எங்க வீட்டிலே தோட்டமில்லையே சுவாமி!''

''அப்படியா? நீர் நிறைய நடக்கிறீர் இல்லையா? தெருவிலே பலவிதமான அறிவிப்புக்கள் தென்படுமே. அவற்றைப் பற்றிய விவரங்களைக் குறித்து வையுங்களேன்! 'அபாயம்!' 'பள்ளிக்கூடம் — மெதுவாகச் செல்லுங்கள்' (உங்களுக்கல்ல; கார்களுக்கு). 'அபாயம்— மனிதர்கள் வேலை செய்கிறார்கள்!'—இப்படிப் பல விசித்திரமான அறிவிப்புப் பலகைகளை நீங்கள் கண்டறியலாம்!''

''ரொம்ப தூரம் நடக்கணுமே. வாக்கிங் ஸ்டிக்கோடு நடக்கிற வயதான காலத்திலே அந்தப் பொழுது போக்கைப் பார்த்துக்கலாம்!''

''ஓய்! உம்ம வார்த்தையிலேயே சரியான பொழுது போக்கு இருக்கே! பலவிதமான வாக்கிங் ஸ்டிக்குகளைச் சேகரித்து வையுமேன். உங்க பாட்டனார், கொள்ளுத் தாத்தா காலத்திய 'வாக்கிங் ஸ்டிக்கு'கள் பல சரித்திரச் சம்பவங்களைக் கூறுமே!''

''அதற்கு நிறைய இடம் வேண்டுமே ஐயா? நாங்க குடியிருக்கிறதே சிறிய இடம்தானே?''

''நீர் காற்றாடி விடலாம் ஐயா. உம்ம மொட்டை மாடியிலிருந்து! காற்றாடி தயாரிக்கிறது சுலபம். பேப்பர், குச்சிகள், நூல் இவையெல்லாம் வாங்கிக் காற்றாடி தயாரித்து உயரப் பறக்க விடுமே!''

''உமக்குத் தெரியுமா? எங்க பக்கத்து வீட்டிலே இப்படித்தான் ஓர் இளைஞன் எதிர்த்த வீட்டுக்குக் காற்றாடி பறக்க விட்டுண்டிருந்தான். எதிர்த்த வீட்டுப் பெண்ணுக்குக் காதல் கடிதாசுகளைக் காற்றாடியிலே பறக்க விட்டான். ஒரு நாள் அந்தப் பெண்ணுக்குப் பதிலா அவன் அப்பா காற்றாடியைப் பிடித்து விட்டார்! அவர்கள் காற்றாடிக் காதல் புரிந்து விட்டது அவருக்கு. அந்தப் பையனைச் சரியாய்ப் பதம் பார்த்து அனுப்பிவிட்டார் அவன் தந்தை!

''காற்றாடி பிடிக்கிற ஜோரிலே பல பையன்கள் ஓடுகிற மோட்டார் காரிலே மாட்டிக்கிற செய்தியும் கேள்விப்பட்டிருப்பீரே!''

''மைதானங்களிலே உயரப் பறக்க விட்டு ஒருவரோடு ஒருவர் போட்டி விட்டால் பொழுது போய்விடும்!''

''காற்றாடியைப் பிடிக்கிறேன், டீல் விடறேன் என்று ஆரம்பித்துச் சண்டை வந்துவிடும். அது நமக்கு ஒத்துக் கொள்ளாது!''

''சரி, நீர் தரையைப் பார்த்து நடப்பீரா? வானத்தைப் பார்த்து நடப்பீரா?''

''ஏன் எதற்குக் கேட்கிறீர்?''

''வானத்தைப் பார்த்து நடப்பதா யிருந்தால் நட்சத்திரங்களைப் பார்த்து வான சாஸ்



திரம் பற்றி அறியலாம். நல்ல பொழுது போக்கு!''

''அது இரவிலே செய்கிற காரியம். நான் சீக்கிரமே தூங்கிவிடுவேன்!''

''பகலிலே நடக்கும்போது தரையில் மனிதர்கள், மிருகங்களின் பாதங்கள் பதிந்திருப்பதைப் பாருங்கள். எந்தெந்த மிருகங்கள் எப்படி எப்படிப் பாதங்களைப் பதிக்கின்றன என்று ஆராய்ச்சி நடத்தினால் பொழுது போய்விடும்! அடிச்சுவட்டைப் பார்த்து இன்னாருடைய பாதம் என்று கூறிவிடலாம்!''

'' 'பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ?' என்று கம்பர் அப்பவே சொல்லி வைத்திருக்கிறார்! எனக்கு அரட்டை அடிப்பதிலேயே பொழுது போய்விடும்!''

''நமக்கு அரட்டைன்னு அலர்ஜி. 'போர்'டிக்கும். வரேன்!'' —பி. எஸ். எம்.



அமெரிக்காவில் 'இன்டோர் பட்டம்' விற்கிறார்கள். பெட்டி போல் இருக்கும் இதன் ஸ்விட்சை அழுத்தினால் இதனுள்ளே இருக்கும் பட்டம் நூலை இழுத்துக்கொண்டு வெளி வந்து பறக்க ஆரம்பிக்கும். வீட்டு ஜன்னலிலிருந்து பறக்க விடலாம்.

ஆதாரம்: 'எஸ்கொயர்'
- நகல்: பாலி

# தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

## 19/20, லிங்கி செட்டித் தெரு, சென்னை-1

தந்தி விலாசம்: "அர்பாங்க்"
தபால் பெட்டி எண்: 226

தொலை பேசி எண்:
20367, 20368, 20369
டெலக்ஸ் எண்: MS. 7225

எங்கள் வங்கியில் நீங்கள் செலுத்தும் டெபாஸிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும், விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.

---

**வட்டி விகிதங்கள்:**

**கரண்ட் அக்கௌண்ட்:** (வருடத்திற்கு) ½%

**ஸேவிங்ஸ் பாங்க் அக்கௌண்ட்:**

(குறைந்தபட்ச மாத நிலுவையின் பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது) 4%

**சீசன் டெபாஸிட்டுகள்:** ரூ. 1000-ம் அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | |
|---|---|
| 15 நாட்கள் | 2% |
| 46 நாட்கள் | 3% |

**பிக்ஸெட் டெபாஸிட்டுகள்:** ரூ. 100 ம் அதற்கு மேலும்

| | | | |
|---|---|---|---|
| 91 நாட்கள் | 4½% | 24 மாதங்கள் | 6½% |
| 6 மாதங்கள் | 5½% | 36 மாதங்கள் | 7¼% |
| 12 மாதங்கள் | 6¼% | 60 மாதங்கள் | 7½% |

குறைந்தபட்ச கால அளவாக ஓராண்டு காலத்திற்கு ரூ. 1000/-க்கும் அதிகமாக உள்ள டெபாஸிட்டுகளுக்கு மாதாந்திர வட்டி அளிக்கப்படுகிறது.

மத, தர்ம கல்வி ஸ்தாபனங்களின் டெபாஸிட்டுகளுக்கு மேலே குறிப்பிட்டதைவிட ½% கூடுதல் வட்டி தரப்படும்.

**ரெக்காங் டெபாஸிட்:** **தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம்:**

| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.5ம் அதன் மடங்குகளும் | ரூ.62 | 128.60 | 201 | 278 | 362.50 | 452 | 548.60 |

---

*இதர விவரங்களை வங்கியின் கீழ்க்கண்ட கிளை அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்*

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் |
|---|---|---|
| மயிலாப்பூர்: | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர்: | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 20437 |
| திருவல்லிக்கேணி: | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர்: | 19, பாண்டி பஜார், சென்னை-17 | 442852 |
| காந்திநகர்: | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஷெனாய்நகர்: | 8-1, செங்குந்த முதலி தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ்: | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| சாந்தோம்: | 110, சாந்தோம் ஹைரோடு, சென்னை-4 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு | 14, கேசவப் பெருமாள்புரம் காலனி, சென்னை-28 | 74215 |
| மயிலாப்பூர் குளம் | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| அண்ணாசாலை ("காமதேனு") | 109 D & E, அண்ணாசாலை, சென்னை-18 | 440292 |
| சாஸ்திரி நகர்: | B-10, சாஸ்திரி நகர், அடையாறு, சென்னை-20 | 76418 |
| அசோக் நகர்: | 273-B, 10வது அவின்யூ, அசோக் நகர், சென்னை-33 | 445843 |
| அண்ணா நகர்: | 280, அண்ணா நகர், சென்னை-40 | |
| அண்ணாசாலை (அண்ணா சிலை) | 776, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5 | 812859 |
| ஜவஹர்நகர்: | 30, சுந்தரராஜ பெருமாள் கோயில் தெரு, சென்னை-82 | |
| நுங்கம்பாக்கம்: | 15, கிருஷ்ண அய்யர் தெரு, சென்னை-34 | |

ஆர். கனகசபை
தலைவர்

பி. என். டி. சாரி
செயலர்

# மந்திரி குமாரி

நாடகத்தின் பெயரைப் பார்க்கும்போது எவ்வளவு கர்நாடகமாக அலுப்புத் தட்டுகிறாற் போலிருக்கிறது! இப்படித் தோன்றும் என்று தெரிந்துதானோ என்னவோ, நகைச்சுவையுள்ள சமூக நாடகம் என்று தலைப்பின் கீழேயே போட்டு உற்சாகப்படுத்த முயன்றிருக்கிறார்கள். முயற்சி வீண் போகவில்லை.

நாடகம் முதல் காட்சியிலிருந்தே களைகட்டி விடுகிறது என்று சொல்லலாம்.

''கங்கை கொண்டான், இமயம் வென்றான், முன்னாள் மந்திரி, டாக்டர் பரகராம்'' அவர்களை யாரோ வெறும் பரகராம் என்று கூப்பிடுகிறார்கள். இதை விரும்பாத பரகராமின் முக பாவங்களை அந்தப் பாத்திரத்தை ஏற்றுள்ள எஸ். வி. சகஸ்ரநாமம் மிக அருமையாகக் காட்டுகிறார்! அதற்கு அவர் கைத்தடியும் நன்றாக நடித்து உதவுகிறது.



இன்றைய அரசியல் சமூக வாழ்வின் சில அம்சங்களை மிக நாசுக்காக எள்ளி நகையாடுவதால்தான் நாடக அரங்கில் அடிக்கடி சிரிப்பொலி எழுகிறது.

வீட்டு வேலைக்காரியாக வந்து வீட்டு எஜமானி அந்தஸ்துக்கு உயர்ந்துவிட்ட காளியம்மா பாத்திரத்தை ஏற்று நடிக்கும் நடிகை காந்திமதி தமது பாகத்தை அபாரமாகச் செய்கிறார்.

அதேபோல் டாக்டர் பரகராமின் மகள் கஸ்தூரியாக நடிக்கும் சூரிய பிரபா, தனது சித்தப்பா மகனுக்குக் காதல் ஏற்பட்ட நிகழ்ச்சியைக் கற்பனையாக நடித்துக் காட்டும் இடம் மிகச் சிறப்பாக இருக்கிறது. அந்த இடத்தில் வசனம் எழுதிய கோமல் சுவாமிநாதனைப் பாராட்டுவதா, அவ்வசனங்களை நல்ல கலை உணர்ச்சியுடன் நடிக்கும் நடிகையைப் பாராட்டுவதா என்று ரசிகர்கள் திக்குமுக்காடித்தான் போகிறார்கள்.

தேசபக்தியினால் உந்தப்பட்டு, சொத்துச் சுதந்திரத்தை இழந்து, பின்னும் பரகராம் போன்ற பெரிய பணக்காரர்களை அண்டி அன்றாடச் செலவுக்கு இருபது முப்பது என்று வாங்கிப் பிழைக்கும் வையாபுரி பாத்திரத்தை ஏற்று நடிக்கும் வீராச்சாமி தமது பாகத்தைத் திறம்படச் செய்கிறார். பரகராமின் மகள் எடுத்து எறிந்து பேசி அவமானப் படுத்தும்போது அவரது தன்மான உணர்ச்சி விசுவரூபம் எடுத்து விடுகிறது. அந்த இடங்களிலும் நாடக ஆசிரியரும் நடிகரும் பாராட்டுக்களைப் பெற்றுவிடுகிறார்கள்.



மேனாட்டில் படித்துப் பட்டம் பெற்று விட்டு வந்த கஸ்தூரி, தந்தையின் விருப்பத்துக்கு விரோதமாக எழுத்து வாசனையற்ற எருக்கஞ்சாவடி வண்டிக்கார முத்துவைக் கல்யாணம் செய்துகொள்ள எடுத்துக் கொள்ளும் முயற்சிகளும், தந்திரங்களும்தான் கதை! இதற்கு இவ்வளவு பாடு என்னத்துக்கு என்று தோன்றுகிறது!

கதை இப்படி ஜீவனற்று இருப்பதால், வசனங்கள், நடிப்பு எல்லாம் நகைச்சுவையுடனும், சிறப்பாகவும் இருந்தும், நாடகம் முடிந்து வெளியில் வரும்போது மனத் திருப்தி ஏற்படவில்லை.

மேனாட்டுப் படிப்பு படித்துப் பட்டம் பெற்று வந்தவள் தன்னைக் காதலிக்கிறாளே என்பதற்காக வண்டிக்கார முத்து தனது கல்வியறிவை விருத்தி செய்து கொள்ள முயல்கிறான் என்றாவது ஒரு பொருளுண்டு.

அல்லது, வண்டிக்கார முத்துவிடம் படிப்பு வாசனை இல்லாவிட்டாலும் உன்னத நோக்கங்கள் உள்ளன; படித்து நாகரிகம் அடைந்தவர்கள் செய்ய முடியாத தியாகங்களை அவன் செய்யக் கூடியவன் என்று காட்டியிருந்தாலும் மன நிறைவு ஏற்பட்டிருக்கும்.

அசட்டு வண்டிக்கார முத்து கடைசிவரை அசட்டு வண்டிக்கார முத்துவாகவே இருப்பதால், கஸ்தூரி அவனை அடைய எடுத்துக் கொள்ளும் முயற்சிகளும், தந்திரங்களும் வெறும் அசட்டுத்தனமாகவே போய்விடுகின்றன!

— எஸ். வி. எஸ்.

மேலான ஒளி வீசி நெடுங்காலம் உழைப்பவை

**கிராம்டன்** சூப்பர்கோல்ட் :.பிட்டிங்குகள் மற்றும் துணையுறுப்புகள் கொண்ட

**கிராம்டன்** :.ப்ளோரசெண்ட் டியூப்லைட்கள்

நம்பகமான
மின்சார சாதனங்களுக்கு
நாடறிந்த பெயர் — கிராம்டன்!

**Crompton Greaves**

AIYARS—CG.153 TM




**வீ**ட்டுச் சுற்றுச் சுவரின் பக்கவாட்டில் அமைந்திருந்த மனிதர்கள் மட்டுமே நுழையக் கூடிய குறுகலான மரக் கதவின் பின்புறம் ஒரு உருவம் வந்து நின்றது. கதவிலிருந்த இடைவெளிகளில் ஒன்றின் வழியே ஓர் அழகிய சிவந்த, கடியாரக் கரம் புகுந்து உட்பக்கமாக இருந்த கொக்கியைத் தள்ளிவிட்டுக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தது.

"யார், அமுதாவா?" என்று வீட்டினுள்ளிருந்து கௌரி கேட்டாள்.

"ஆமாம்மா."

மீண்டும் கொக்கியை மாட்டிவிட்டு அமுதா வாசல் பக்கம்வரை சுற்றி நடந்து வந்து வீட்டுக்குள் நுழைந்தாள். அந்த எழில்வார்ந்த இளம் முகத்தில் களைப்புக் குறியோடு கூட ஒருவித ஆறுதலின் சாயலும் தெரிந்தது. கடைசியில் பரீட்சையை எழுதி முடித்தாயிற்று. பி.ஏ. பட்டம் வந்தாலும் வராவிட்டாலும் இனி முடிவுகள் வெளியாகும்வரை தாற்காலிகமாகவேனும் கவலையற்ற நிம்மதி தான். அப்பாடா! இந்த விடுதலையை நன்கு அநுபவிக்க வேண்டும்...

அமுதா உள்ளே வந்ததும் முதல் வேலையாகத் தன் கையிலிருந்த பேனாவைத் தூக்கி சோபா மேல் எறிந்தாள்.

"விடுதலை! விடுதலை! விடுதலை! பேனாவுக்கும் இங்க் புட்டிக்கும் பேப்பருக்கும் விடுதலை!" என்று பாடிவிட்டு, "என்ன அலுப்பு என்ன அலுப்பு! சாப்பிட என்னம்மா வைச்சிருக்கே" என்றவளாக அந்த அயர்வு உணர்வைச் சுவைத்துக் கொண்டே மற்றொரு சோபாவில் உட்கார்ந்தாள்.

தலையணை உறையில் பூத் தைத்துக்கொண்டிருந்த கௌரியும், மீண்டும் அலுவலகம் செல்லு முன் சற்று நேரம் வீட்டில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த சுந்தரமும் தலையை உயர்த்தி மகளைப் புன்னகையோடு பார்த்தார்கள். கௌரியின் முகத்தில் இலேசாக எண்ணெய்ப் பளபளப்புத் தெரிந்தது.

"பரீட்சையில் எப்படி எழுதியிருக்கே அமுதா?" என்று கேட்டாள் கௌரி.

"வெளுத்திருக்கேன்."

"வெள்ளைக் காகிதமாகவே கொடுத்துட்டியா?"

''பாருங்கப்பா அம்மாவை!'' என்று அமுதா சிணுங்கினாள்.

''என் வாழ்க்கையில் அதைத் தவிர வேறு என்ன வேலை எனக்கு?'' என்றார், சுந்தரம், மனைவியைக் குறும்பாகப் பார்த்தவாறு. கௌரி அவரை நோக்கி ரகசியமாய் முறைக்கவே அந்தப் பார்வைக்கு அடங்கி உடனே மகளிடம் ''அம்மாவைப் பார்க்கறதெல்லாம் கிடக்கட்டும், பாஸ் பண்ணி விடுவி யோல்லியோ?'' என்று கேட்டார்.

''என்னப்பா கேள்வி இது! அதுதான் கொன்னுட்டேன்னு சொல்றேனே! பாஸ் என்ன, க்ளாஸ் வரும்!''

''வெரி குட்!'' என்றார் சுந்தரம்.

''இதிலே என்ன குட்? க்ளாஸ் வாங்கி இவள் என்ன மேலே படிச்சுப் புரட்டணும் இப்போ? ஏதோ பி.ஏ.ன்னு ஒன்னு ஆச்சு. அடுத்தது சட்டுப் புட்டுன்னு ஒரு வரனைப் பார்த்துக் கலியாணம் செய்ய வேண்டியது தான்'' என்ற கௌரியின் மனத்தில் மூன்று நான்கு பொருத்தமான பையன்களின் நினைவு எழுந்தது. அவர்களுள் ஒருவனை முடிவு செய்ய வேண்டியதுதான். ஒரு பையனுக்குப் பம்பாயில் செழிப்பான கம்பெனி வேலை. இன்னொருவன் அவ்வளவு சம்பாதிக்கவில்லை. ஆனால் சர்க்கார் உத்தியோகம். இங்கு சென்னையில்தான். இன்னொரு வரன் சுந்தரத்தின் சொந்த அக்காவின் மகன். மதுரையில் தொழில் துறையில் ஈடுபட்டிருந்தான். அவன் தந்தை உத்தியோகத்தி லிருந்து ஓய்வு பெற்ற பின் அவரும் அவர் மனைவியும் மகனுடனேயே வசித்துக் கொண்டிருந் தார்கள். சுந்தரத்தின் சகோதரி அடிக்கடி அவருக்கு எழுதுவதுண்டு. ''பத்து நாள் லீவு எடுத்துக் கொண்டு கௌரியோடும் அமுதாவோடும் இங்கு வந்து விட்டுப் போயேன். உங்களோடெல்லாம் சில நாட்கள் சேர்ந்து இருக்க வேண்டும்போல் இருக்கிறது...''

அவளுக்கும் ஒருவேளை அமுதாவை மருமகள் ஆக்கிக் கொள்ளும் எண்ணம் இருந்திருக்கலாம். அதனால்தான் அமுதாவும் சேதுவும் சில நாட்கள் ஒன்றாக இருந்து பழகட்டும் என்று நினைக்கிறாளோ?

மதுரை. அந்தப் பெயரிலேயே கௌரிக்கு ஒரு கவர்ச்சி மயக்கம் இருந்தது. அவளும் சுந்தரமும் முதன் முதலாகச் சந்தித்த இடமல்லவா?

அந்த எண்ணச் சுவட்டில் கண நேரம் நெஞ்சை இழந்தவளாய் கௌரி கையி லிருந்த தையல் வேலையை மேஜை மேல் வைத்து விட்டுச் சேலைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். எண்ணெய் வழியும் முகமென்றாலே இந்தத் தொல்லை தான். அடிக்கடி துடைத்துக் கொள்ளவேண்டி யிருக்கிறது.

''நான் ஒண்ணும் கல்யாணம் செஞ்சுக்கப் போறதில்லே போ'' என்று உதட்டைப் பிதுக்கினாள் அமுதா.

''நீ செஞ்சுக்காமல் பின்னே உன் பாட்டியா செஞ்சுப்பா?'' என்றாள் கௌரி.

''கொஞ்ச நாளாவது ஜாலியா இருக்கப் போறேன் அம்மா. இன்னும் ஒரு வாரத்துக் குள்ளேயே நாங்க சில ஸ்நேகிதிகளாச் சேர்ந்துண்டு எக்ஸ்கர்ஷன் போகப் போறோம். நாலு இடங்களைப் பார்த்து ரசிச்சு அநுபவிக்க வேண்டாமா? குடுகுடுன்னு குடும்பத்தில் அமுங்கிப் போயிடணுமா?''

''வேண்டாம், மெதுவாகவே அமுங்கிப் போ. ஆனா உன் எக்ஸ்கர்ஷன், ஊர் பார்க்கறது, அநுபவிக்கறது இதுக்கெல்லாம் நடுவில் கொஞ்சம் வீட்டுக் கவனிப்பு, சமையல் வேலை இதையெல்லாமும் கத்துக்கணும். இன்னிக்கு ராத்திரிச் சமையலை உன்னையும் கூட வைச் சுண்டுதான் செய்யப் போறேன்.''

''போம்மா. நான்தான் குடும்பத்திலே இப்ப மூழ்க மாட்டேன்னு சொல்றேனே.''

''குடும்பத்திலே மூழ்கறதுக்கும் சமையல் கத்துக்கறதுக்கும் என்னடி சம்பந்தம்? தனியாய் இருக்கிறவர்கள்கூட தங்கள் வயித் துக்குச் சாப்பிட்டுத்தானே ஆகணும்?''

''சாப்பாடு, சாப்பாடுன்னு வெறுமே பேசிண்டுதான் இருக்கே. நான் பரீட்சை எழுதிக் களைச்சு வந்திருக்கேன். பசி உயிர் போறது. எனக்கு இன்னும் சாப்பிட ஒண்ணும் கொடுக்கலை நீ.''

''வா தரேன்'' என்று கௌரி எழுந்தாள். ''டிபன் தரேன் முதலில். நீ சாப்பிட்டு முடிக் கறதுக்குள் முகத்தை அலம்பிண்டு வந்துட்டு அப்புறமாய்க் காப்பி கலக்கறேன்.''

''நீ ஒண்ணும் அலம்பிக்க வேணும் அம்மா. எண்ணெய் வழிஞ்சாலும் உன் முகம் அழகாய்த்தான் இருக்கு. இல்லையா அப்பா?'' என்று அமுதா கண்ணைச் சிமிட்டினாள்.

''எனக்கு அது நன்றாகத் தெரியுமே!'' என்று சிரித்தார் சுந்தரம்.

கௌரி மகளைக் கோபிக்க முயன்றாள். ''சரிதாண்டி கழுதை, என்ன மரியாதை மீறிப் போறது? நான் என்ன உன் உடனொத்த சகியா? யார்கிட்டே என்ன பேசறதுன்னு கிடையாது? வர வர ரொம்பத்தான் துளிர்த்துப் போயிட்டே. இப்படி வெறும் வாயரட்டையாய் இருந்தியானால் உன்னை எவன் கல்யாணம் செஞ்சுப்பான்?''

''பாருங்கப்பா, இந்த அம்மா என்னைத் திட்டறதை!'' என்று அமுதா கொஞ்சினாள்.

சுந்தரம் மகளுக்குப் பரிந்து கொண்டு வந் தார். மனைவியைப் பார்த்து, ''குழந்தையை ஒண்ணும் சொல்லாதேடி! உன்னையே கல் யாணம் பண்ணிக்க ஒரு மடையன் கிடைச் சானே, அவளுக்குத்தானா கிடைக்காம போயிடுவான்?'' என்று அவர் கடிந்ததும் அமுதா பெரிதாய்ச் சிரிக்கத் தொடங்கினாள். கௌரி இம்முறை புன்சிரிப்பை அடக்கிக் கொள்ள முயலவில்லை. சுந்தரத்தின் முகத்தில் அசடு வழிந்தது. அவசரமாக, ''சரி சரி, அமுதா, போதும் சிரிப்பு. பசி உயிர் போற துன்னு சொல்லிட்டு இங்கே உட்கார்ந்து சிரிச்சுண்டிருந்தா எப்படி? உள்ளே போய் டிபன் வாங்கிக்கோ. கௌரி, அவளை அழைச் சுண்டு போ'' என்றார்.

அமுதா எழுந்து சமையலறைப் பக்கம் சென்றாள். அவளைத் தொடர்ந்து போக இருந்த கௌரி சற்றே நின்று திரும்பிக் கண வனைப் பார்த்து, ''எனக்குக் கிடைச்சது மடையன்தானா? நிச்சயமாய்த் தெரியுமா?''

என்று மெல்லிய குரலில் செல்லமாய் முனு முனுத்தாள்.

''நிச்சயம்தான். அதுவும் எப்பேர்ப்பட்ட மடையன்? வலுவில் வந்து மாட்டிண்ட மடையன். மதுரை மடையன்!'' என்றார் சுந்தரம் அதே குரலில்.

''இல்லே. மதுரை சுந்தரேசர்.''

இருவரும் புன்முறுவல் செய்து கொண்டார்கள். கௌரி சமையலறைக்குச் சென்றாள். இட்டிலிகளை எடுத்துத் தட்டில் வைத்து மகளிடம் நீட்டினாள். கொஞ்சம் மிளகாய்ப் பொடி இட்டு எண்ணெய் ஊற்றினாள்.

எண்ணெய்.... கௌரி தனக்குள் மீண்டும் சிரித்துக்கொண்டாள். உள்ளே ஆழ்ந்துபோன பார்வையில் மீண்டும் மதுரை எழுந்தது.

அவளுக்கு அப்போது பதினெட்டு வயது. பள்ளிப் படிப்போடு கல்வி முடிந்துவிட்ட நிலை. பெற்றோர் மும்முரமாக வரன் பார்த்துக் கொண்டிருந்தபோது பொழுது போகாமல் வீட்டில் பூத் தையல் கைவேலைகளில் ஆழ்ந்து நாளிடையே கனவுகளைப் பின்னிக் கொண்டிருந்த காலம்.

அப்போது ஒரு சமயம் அவள் தந்தையின் இளைய சகோதரர் ஒருவரும் அவர் மனைவியும் ஆறு பெண் மக்கள் இருந்தும் தம்மை நரகத்தினின்று மீட்கவல்ல ஓர் ஆண் குழந்தையை வேண்டி இராமேசுவரம் சென்றார்கள். ''கௌரி வீட்டோடு அடைஞ்சு கிடக்கிறாளே! அவளையும் எங்ககூட அனுப்பேன் அண்ணா? ஒரு மாறுதலாய் இருக்கட்டுமே'' என்று சிறிய தந்தை கூறி அவளைத் தம்முடன் அழைத்துச் சென்றார்.

சேதுக் குளியல், சுவாமி தரிசனம், வழிபாடு, பிரார்த்தனை யாவும் முடிந்து அவர்கள் ஊர் திரும்பியபோது மதுரையில் ஒரு நாள் தங்கினார்கள்.

இராமேசுவரத்துக்குப் போய்த் திரும்புறவர்கள் மதுரை சொக்கேசரைத் தரிசித்து அவ்வூரில் ஓர் இரவு தங்காமல் வரக் கூடாது என்பது சம்பிரதாயமாம். அப்படி வந்துவிட்டால் ஏதோ சாபம் பிடிக்குமாம். கிருஷ்ணராயர் தெப்பக் குளத் தெருவில் அநுமார் கோயிலுக்கு அருகில் சத்திரம் ஒன்று இருந்தது. இராமேசுவரம் போய்த் திரும்பும் பயணிகள் மதுரையில் இரவைக் கழிப்பது பெரும்பாலும் அந்தச் சத்திரத்தில்தான். எனவே அது, ''ராத்திரிச் சத்திரம்'' என்றே வழங்கியது.

இவ்வாறு தங்கும் யாத்திரிகர்களுக்கு அந்த ஓர் இரவுச் சாப்பாட்டுக்குக் கோயிலே ஏற்பாடு செய்துவிடும். இத்தனை பேர் என்று தர்மகர்த்தா சீட்டுக் கொடுப்பார். அதைக் கொண்டு போய் மளிகைக் கடையில் காட்டினால் அத்தனை பேரின் உணவுக்கான மளிகைப் பொருள்களை அங்கே தருவார்கள்.

கௌரிக்கு மதுரை என்றால் அங்கு மீனாட்சி அம்மையையும் சொக்கநாதரையும் தரிசித்தது நினைவு வருவதில்லை. ஆயிரங்கால் மண்டபம், பொற்றாமரைக் குளம் போன்ற அழகுகள் நினைவு வருவதில்லை. ஆஞ்சநேயர் கோயிலும் ராத்திரிச் சத்திரமும்தாம் அவள் மனத்தில் நிலையான இடம் பெற்றவை.

மீனாட்சியம்மன் ஆலயத்துக்குச் சென்று வந்தபின் சிற்றப்பாவும் சித்தியும் களைப்புற்றிருந்ததால் கௌரியே முகம் கழுவிக் கொண்டு தர்மகர்த்தாவிடம் சீட்டுப்பெற்று மளிகைக் கடைக்குப் போனாள். அங்கு அவளைப் போலவே சீட்டுடன் ஒரு வாலிபனும் நின்றிருந்தான்.

கடைக்காரர் வயது சென்றவர். தனியாக ஒரு பருவப் பெண் வந்திருக்கிறாளே, அவளைச் சீக்கிரம் அனுப்பிவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு, ''எவ்வளவு பேரம்மா, உன் சீட்டில்? உனக்கு முதலில் கொடுத்துடறேன்'' என்றார்.

இளைஞனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''இது என்ன அக்கிரமம்! நான்தான் முதலில் வந்தேன். எனக்குத்தான் முதலில் கொடுக்கணும்'' என்றான்.

''பெண் குழந்தை அது.......''

''பெண்ணாவது, ஆணாவது! வெளியில் கிளம்பிட்டா எல்லாரும் ஒண்ணுதான். பெண்ணுன்னு சலுகை வேணும்னு வீட்டோடு இருக்கணும்.''

கௌரி கடைக்காரரைப் பார்த்து, ''பெரியவரே, இந்த மனுஷன் ரொம்ப

## டாக்டர்! டாக்டர்!



டாக்டர் ஆக வேண்டுமா? அதாவது எம்.பி., பி.எஸ். டாக்டர் ஆக வேண்டுமா?

ஒரு சுலபமான வழி: பீகார் மாநிலத்துக்குப் போக வேண்டும். பாட்னா மெடிக்கல் கல்லூரியில் சேர வேண்டும். 'சரியான' புள்ளிகளைத் தெரிந்து வைத்திருக்கவேண்டும். அப்புறம் உங்களுக்கு டாக்டர் பட்டம் கிடைத்துவிடும்.

சென்ற ஆண்டு எம். எஸ். தேர்வு நடந்த விவரங்களைக் கேளுங்கள்:

★ பல மாணவர்களுக்கு முன்னதாகவே கேள்விகள் தெரிவிக்கப் பட்டன.

★ நோயாளியைச் சோதிக்கும்போது, சில மாணவர்களுக்கு சீனியர் டாக்டர்கள் உதவுமாறு உத்தரவு வந்தது.

★ முதல் 'ராங்க்' வாங்கிய மாணவர்களில் ஒருவர் ஆண்டு முழுவதும் ஒழுங்காகவே வகுப்புகளுக்கு வந்ததில்லையாம். அப்படியும் அவர் அதிக மார்க்குகள் வாங்கினார்.

★ சென்ற ஆண்டு இதே கல்லூரியில் நடந்தது இன்னும் சுவையான விஷயம். எம்.பி.,பி.எஸ். இறுதித் தேர்வில் பல முக்கியமான மாணவர்கள் தேறவில்லை. என்ன செய்வது? வெகு தாராளமாக எல்லா மாணவர்களுக்கும் ஆளுக்கு 54 மதிப் பெண்கள் கூட்டி விட்டார்கள்! இதனால் பல புது டாக்டர்கள் தோன்ற முடிந்தது!

ஆகவே, ஓர் எச்சரிக்கை.

உடம்பு நலமில்லையா? டாக்டரிடம் போகிறீர்களா? அவர் பீகாரில் பட்டம் பெற்றவரா என்று முதலில் தெரிந்து கொள்ளுங்கள்.

-அ. ஆ

(டைம்ஸ் ஆஃப் இந்தியாவில் அண்மையில் வெளியான ஒரு தலையங்கம் ஆதாரம்.)

சத்தம் போடறுர், எனக்குக் காது பிளந்து போறது. முதலில் அவருக்கே கொடுத்து அனுப்புங்க, கொஞ்சம் நிம்மதியாளும் கிடைக்கும்'' என்ருன்.

''என்ன வாய் ரொம்ப நீளறது? நான் அப்பலேருந்து காத்துண்டிருக்கேன். எட்டுப் பேர் இனி மேல் சமைச்சுச் சாப்பிட்டாகணும். எனக்கு முதலில் கொடுங்க. துடுக்குத்தனமாய்ப் பேசறவங்களைப் பத்தி எனக்குக் கவலே இல்லே'' என்று வாலிபன் சீறிந்து கொண்டே கௌரியை முறைத்துப் பார்த்தான். கௌரி சிரிப்பை அடக்கிக் கொண்டாள். அவனுடைய படபடத்த பேச்சையும் சிவப்பேறிய முகத்தையும் பார்த்தபோது அவனைப் பரிகசிக்க வேண்டும் என்ற குறும்புத்தனமான ஆசை பீறி வந்தது.

''ரொம்ப அவசரப்படறுர் பாவம். முதலில் கொடுத்தனுப்புங்க. பிள்ளே வரம் கேட்டு ராமேச்வரம் போய் வந்ததில் களேச்சுட்டார் போல் இருக்கு. காக்க வைக்காதீங்க'' என்ருள்.

''ஏய், என்ன வம்புக்கு வறே?'' என்று வாலிபன் அவளிடம் நேராகவே சண்டைக்கு வந்தான். ''என் அக்காவும் அத்திம்பேரும் தான் பிள்ளே வரம் வேண்டி வந்தாங்க. நாங்க சில பேர் அவர்களோட ஒரு பொழுது போக்குக்காக வந்தோம்'' என்று சொல்லிக் கொண்டு வந்தவன் அப்போதுதான் அவள் வனப்பையும் குறுகுறுப்பையும் நன்கு கவனித்தவன் போல் தடுமாறி நிறுத்தினுன்.

கௌரியின் பார்வையும் அவன் மீது பதிந்தபோது அசாதாரண ஒளியுடன் இலங்கியது. அந்தச் சோபையினின்று ஒருவாறு மீண்ட இளைஞன் கடைக்காரரிடம், '' எனக்குக் கொடுங்க முதலில். நான்தான் முதலில் வந்தேன். 'ஃபர்ஸ்ட் கம்; ஃபர்ஸ்ட் ஸர்வ்ட்' '' என்ருன்.

''சரி, உங்களுக்கே முதலில் தரேன் ஸார். எட்டுப் பேரா? டே பையா, சாமான்களே எடு. எட்டுப் பேருக்குச் சரியாய்.'' செப்பந்திப் பையனுக்கு உத்தரவு போட்டபின் கடைக்காரர் கௌரியின் பக்கம் திரும்பினுர். ''உன் சீட்டில் எத்தனே பேரம்மா? அதைச் சொன்னுல் அதுக்குத் தகுந்தபடி அரிசி, பருப்பு, எண்ணெய்......''

அவரை முடிக்க விடாமல் வாலிபன் இடைப் புகுந்து, ''இந்தக் கோஷ்டிக்கு எண்ணெய் எதுக்கு? மூஞ்சியில் வழியற எண்ணெய்யே ரெண்டு டஜன்பேருக்குச் சமையல் செய்யப் போதுமே! எண்ணெய்ப் பணம் மிச்சம்'' என்ருன்.

கௌரியின் முகம் சிவந்தது. அவளுக்குக் கொஞ்சம் எண்ணெய் வழியும் தோல்தான். முகத்தை எத்தனே முறை கழுவிக் கொண்டாலும் சிறிது நேரத்தில் நெற்றியும் மூக்கும் பளபளக்க ஆரம்பித்துவிடும். ஆனுல் அதைக் குறிப்பிட்டுப் பரிகாசம் செய்ய இவனுக்கு என்ன துணிச்சல்!.... கோயில் கடையில் அடுக்கிக் கொண்ட வளையல்கள் குலுங்க அவசரமாய்ச் சேலைத் தலைப்பால் முகத்தை அழுந்தத் துடைத்தவளாய் அவள் அவனே அலட்சியப்படுத்தும் தோரணையில் முகத்தைத் திருப்பிக் கொண்டு கடைக்காரரிடம் ''மூணு பேர்'' என்ருள்.

வாலிபனுக்கு வேண்டிய பண்டங்கள் தயாராகிக்கொண்டிருந்தன. எனினும் அவன், ''சீக்கிரம் சீக்கிரம்'' என்று அவ்வப்போது கௌரியின் பக்கம் கள்ளப் பார்வையை வீசிக் கொண்டே இரைந்தவாறு இருந்தான்.

''பாவம், அவருக்குச் சீக்கிரம் கொடுங்க, பெரியவரே. ஒரு வேளை அவர்தான் போய்ச் சமைச்சுப் போடணுமோ என்னமோ'' என்ருள் கௌரி நாவை அடக்கமாட்டாமல்.

'' என்னேப் பார்த்தால் சமையல்காரன் மாதிரி தெரியறதோ? எண்ணெய் வழிற மூஞ்சியுள்ளவாதான் அநேகமாய்ச் சமையல் வேலை செய்யறவர்களாய் இருப்பா'' என்ருன் வாலிபன்.

''அடடா, சண்டை போட்டுக்க வேண்டாமே! நீங்க யாருமே சமைக்கத் தேவையில்லே. ராத்திரிச் சத்திரத்தின் அநுமார் கோயிலில் இப்ப இருக்கற பூசாரியே யாத்திரிகர்களுக்குச் சமையல் செய்வாக'' என்றுர் கடைக்காரர்.

'' அநுமார் கோயிலில் பூசாரியா! எங்கே இருக்கார்? நான் பார்க்கவே இல்லேயே அவரை?'' என்ற வாலிபனைத் தொடர்ந்து கௌரி, ''எப்படிப் பார்க்க முடியும்? அவர் அநுமானைத் தேடிண்டு வெளியே இல்லே போயிருக்கார்'' என்ருள்.

''என்ன?'' என்ருன் அவன் புரியாமல்.

''ஆமாம். அநுமார் இப்போ கோயிலுக்குள்ளே இல்லேயாம்!'' என்று கூறி அவனே அர்த்தபுஷ்டியுடன் உற்றுப் பார்த்துவிட்டு, பழிவாங்கிவிட்ட திருப்தியுடன் கௌரி கண்களில் ஒளி வெள்ளமிடச் சிரித்தாள். வாலிபன் ஆத்திரம் கனலக் கனலச் செயலற்று நின்றுன்.

ஆனுல் ராத்திரிச் சத்திரத்தில் அன்றிரவு இரு கோஷ்டிகளும் நட்புப் பூண்டு உரை

---

''நமது சங்கக் கட்டட நிதிக்காக நன்கொடை எவ்வளவு நீங்கள் கேட்டாலும் நான் செக் தரத் தயார். முதலில் நான் கட்டவேண்டிய வரிபாக்கி, வாடகை பாக்கி, சொந்த டிரைவர், மேக்கப்மேனின் சம்பள பாக்கி இவைகளைக் கொடுக்க நீங்கள் எனக்குப் பண உதவி செய்யச் சம்மதித்தால்!''



வாடுகையில் அவனுடைய பெயர் சுந்தரம் என்று அறிந்த கௌரி தனக்குள் பூரித்துப் போனாள். அருமார் என்று பரிகசித்தாளே அவனை, பாவம்! உண்மையில் அவன் உருவத்துக்கு ஏற்ற பெயர்தான் கொண்டிருக்கிறான். மதுரைக்கு வந்து சுந்தரம் என்பவனை அவள் அறிந்து கொள்ள நேர்ந்தது எத்தனை பொருத்தம்! அந்த எண்ணமே அலாதியாக இனித்தது.

அப்படி அறிமுகமாகி, பிறகு ஒரே ஊருக்குத் திரும்பியபின் பழக்கம் வளர்ந்து சம்பந்தப் பேச்சு எழுந்து திருமணம் நிறைவேறி.....

"என்னம்மா நீயே என்னமோ சிரிச்சுக்கறே?" அமுதாவின் குரல் அவள் லயிப்பைக் கலைத்தது.

"ஏதோ பழைய நினைவுகள்.... கிடக்கட்டும். நீ இட்டிலி சாப்பிட்டு முடிக்கிறதுக்குள் நான் போய் முகம் அலம்பிண்டு வரேன்."

"போம்மா, எந்த உலகத்தில் இருக்கே? நான் இந்த இட்டிலிகளைச் சாப்பிட்டு அப்புறம் ஒண்ணு எடுத்துப் போட்டுண்டு அதையும் முடிச்சுட்டுக் கை அலம்பிண்டு வந்து உட்கார்ந்து ஒரு யுகம் ஆறது!"

கௌரியின் முகத்தில் சிவப்பு ஏறியது. 'அவ்வளவு தூரம் தன்மயமாகி இன்ப எண்ணங்களில் புதைந்து விட்டேனா? அதுவும் வயது வந்த மகளின் முன்பாக!'

"ஸாரி, அமுதா, நான் கவனிக்கலே, கோவிச்சுக்காதே......"

"ஸ்வீட் ட்ரீம்ஸா அம்மா ?"

"சீ, சீ! அரட்டைக்கள்ளி! அம்மான்னு ஒரு மரியாதை இல்லாம...." திடீரென்று அவளுள் உணர்ச்சி பொங்கிக் கொண்டு திமிறி வந்தது. தன்னை மீறிய ஓர் உந்தலுடன் எழுந்து வந்து மகளை அணைத்துக்கொண்டாள்.

"உலகத்தில் நிஜமாய் சந்தோஷமாயிருக்கிறவா மத்தவர்களுக்குச் செய்யக்கூடிய உன்னதமான ஆசீர்வாதம் என்ன தெரியுமா, அமுதா? 'என் மாதிரி நீ வாழணும்' என்கிறதுதான். நான் உனக்குச் சொல்ற ஆசியும் அதுதான்."

பிறகு தன்னை வசப்படுத்திக் கொண்டவளாய் கௌரி விலகி நின்றாள். "அதெல்லாம் கிடக்கட்டும். இன்னிக்கு ராத்திரியிலேருந்து நீ சமையல் கத்துக்க ஆரம்பிக்கணும், என்ன? நிஜமாய்ச் சொல்றேன், விளையாட்டில்லே."

"அம்மா, இதோ பார்." அமுதா அவள் முன் தன் வலது கையை நீட்டிக் காட்டினாள். கட்டை விரல், சுட்டு விரல், நடு விரல் ஆகிய மூன்றிலும் மசிக் கறை படிந்திருந்தது. "நான் பரீட்சை எழுதி முடிச்சு இன்னும் கையில் இங்க்கூட மறையலே. அதுக்குள் சமையல் அது இதுன்னு மிரட்டாதே."

"சோப்புப் போட்டு அலம்பிண்டு வா, மறைஞ்சுடும்."

"அம்மா, ப்ளீஸ்! இருதயமில்லையா, உனக்கு? மதுரைக்குப் போயிட்டு வரவரைக்குமாவது அவகாசம் கொடும்மா!"

"மதுரையா ?"

"ஆமாம். என் சிநேகிதர்களோடு எக்ஸ்கர்ஷன் போகப் போறேன்னு சொல்லலே?



"அதிகாரம் வேணும்; அதி — காரம் வேணும்னு நேத்து மீட்டிங்கிலே பேசினீங்களே! மிளகாய்ப் பழஜ்ஜி சாப்பிடறீங்களா ?"

மதுரைக்குத்தான் போறோம். பஸ் ஏற்பாடு பண்ணிண்டு. எக்ஸ்பிரஸ் டிலக்ஸ்."

மீண்டும் அதே இடம்! அதே பெயர்! மதுரை என்ற சொல் மதுரம் என்ற பொருளுடன் அல்லவா நெஞ்சினுள் இறங்குகிறது!

ஓர் இனிய சிலிர்ப்பு அவளுள் ஓடியது. அவளுடைய நாத்தி விடுத்துக் கொண்டே இருந்த அழைப்புக்கு ஏற்றாற்போல் இப்போது அமுதாவின் இந்த மதுரைப் பயணம்! அத்தையின் வீட்டுக்குப் போய் வா என்று சொன்னால் கட்டாயம் போவாள். அங்கே அவளும் சேதுவும் — அவன்தான், சேது ஸ்நானத்துக்குப் பிறகு பிறந்த தவமகன் சேதுராமன் — சந்திப்பார்கள்.

கௌரியும் சுந்தரமும் சந்தித்த மாதிரியா? இல்லாவிட்டால் எத்தனையோ இடங்கள் உள்ளபோது இந்தப் பெண்கள் மதுரையைத் தேர்ந்தெடுப்பானேன்? பொருத்தமான வரன்களில் ஒன்று மதுரையில் இருப்பானேன்?

"போய்ட்டு வாடி, கண்ணு. தாராளமாய்ப் போய்ட்டு வா...."

அந்தப் பூரிப்பின் ஒளியில் பொலிந்தவாறே இரவு கணவனிடம் விஷயத்தைச் சொன்னாள்.

"சேதுதான் நம்ம மாப்பிள்ளையாய் ஆகப் போறான்னு நினைக்கறேன். எனக்கு அதில் ரொம்ப திருப்தி. உங்க அக்கா எப்பவுமே எனக்கும் ஓர் அக்கா மாதிரியேதான் பிரியமாய் நடந்திண்டு வந்திருக்கா. அந்தப் பிள்ளைக்கு நம் அமுதாவைக் கொடுக்கறதில் எனக்கு ரொம்ப சந்தோஷம்."

"என்னமோ கல்யாணம் நிச்சயமாய்ட்ட மாதிரியே பேசறியே!"

"இது நிச்சயமாயிருக்கிறதில் என்ன சந்தேகம்? அதே மதுரை. நாம் ரெண்டு பேரும் சந்திச்ச மாதிரி இவாளுக்கு ஒரு சந்திப்பு. எவன் பிறக்கறதுக்காக உங்க அக்கா ஜெம்பினதில் நீங்களும் நானும் மதுரையில் சந்திச்சோமோ அதே சேது இருக்கிற அதே ஊருக்கு இப்போ இவள் போறா. நம் குடும்



# தெரிந்த விளையாட்டு; தெரியாத ஜோக்!

## மாமழை போற்றுதும்!

ஜெயிப்பதற்கு இன்னும் ஐந்நூறு ரன்கள் இருக்கும்போது காப்டன் ஓர் ஆட்டக்காரரிடம் சொன்னார்: "நீ ஒரே ஒரு ரன் எடுத்தால் போதும், இந்த 'டெஸ்ட்' 'டிரா'வில் முடிந்துவிடும்!"

"அதெப்படி?" என்று புரியாமல் கேட்டார் மற்றவர்.

காப்டன் சொன்னார்: "நீ ஒரு ரன் எடுத்தால் உடனே மழை வரும். மழை வந்தால் ஆட்டம் 'டிரா'வில்தானே முடியும்?"

## கையாலாகாதவரா?

'கால் பந்தாட்டப் புலிகள்' எனப் பெயர் பெற்ற குழுவினருடன் ஆடக் குழுத் தலைவர் ஒருவரை அழைத்தார். பந்தாக்கொள்ளியான அவர் மறுக்கவே தலைவர் காரணம் கேட்டார்.

"கையை நீட்டவே முடியவில்லை, ஒரே வலி" என்றார் அவர்.

"கை வலியானால் என்ன? நாம் ஆடப்போவது கால் பந்துதானே?" என்றார் தலைவர்.

மற்றவர் விடாப்பிடியாகச் சொன்னார்: "உளறுதே! நான் பிரமாதமாக ஆடி ஜெயித்ததும் கவர்னர் கோப்பையை எப்படிப் பெற்றுக் கொள்வது?"

## இது...அது ... எது?

"டாக்டர்! வியாபாரக் கவலைகளை மறக்க கால்ஃப் விளையாட்டில் ஈடுபடச் சொன்னீர்கள் இல்லையா, ஆறு மாதங்களுக்கு முன்?"

"ஆமாம்!"

"இப்போது வியாபாரத்தில் ஈடுபட ஒரு வழி சொல்லுங்கள்!"

## கூடை கூடையாய் விழுங்கவோ?

"பந்தைக் கூடையில் உயரே போட்டுவிட்டுக் கீழே பெரிசா வாயைத் திறந்துண்டு நிக்காதே என்று படித்துப் படித்துச் சொன்னேனே, கேட்டாயா?"

- கே. வி. முரளி

---

பத்தைப் பொறுத்த வரைக்கும் மதுரை என் இறது அன்பு துளிர்க்கிற களம். மறுபடியும் அதுவே அமையறது ஒரு முக்கிய விஷயமாய் உங்களுக்குத் தோணலையா? நான் என்னமோ இதைத் தெய்வ சூசனையாய்த்தான் நினைக்கிறேன்."

"கௌரி!" சுந்தரம் அவளுடைய கிளர்ச்சியுற்ற முகத்தை ஆழ்ந்து நோக்கினார். "சேது நமக்கு மாப்பிள்ளையாய் வரணும்னு இருந்தால் எனக்கும் அதில் சந்தோஷம்தான்; நான் இல்லேன்னு சொல்லலே. ஆனால் அதையே என்னமோ தீர்ந்துபோன விஷயமாய் நினைச்சுண்டுடாதே."

"ஆரம்பத்துலேயே ஏன் இப்படி அவநம்பிக்கையா சொல்றேள்?" என்றபோது கௌரியின் முகம் சுருங்கியது.

"இல்லே கௌரி. ஆனா நீ வாழ்க்கையைக் குறுக்கிவிடணும்னு பார்த்தால் அது தப்பு. நிகழ்ச்சிகள் திரும்பத் திரும்ப ஒரே மாதிரிதான் அமையும்னு நினைச்சுக்கறது வாழ்க்கைக்கும் மனித சிருஷ்டிக்கும் நாம் அநியாயம் பண்ணறதாகும். உனக்கும் எனக்கும் அன்பு ஏற்பட்ட ஒருகளத்துக்குத்தான், அதே மாதிரி ஒரு வாய்ப்புள்ள சூழ்நிலையில் நம்ம மகளும் போறு. ஆனால் ஒற்றுமை அந்த அளவோடு நின்னு போயிடலாம். அவளுக்கும் சேதுவுக்கும் நீ நினைக்கிற பிணைப்பு ஏற்படாமல் இருந்துடலாம். ஆரம்பம் ஒண்ணாயிருக்கிறதால் தொடர்ச்சியும் முடிவும்கூட ஒண்ணாகவேதான் இருக்கும்னு எப்படிச்சொல்லமுடியும்?"

கௌரி அவரை வெறித்துப் பார்த்தாள். சுந்தரம் புன்முறுவலுடன் மிருதுவாய்த் தலையை அசைத்தார்.

"மனுஷ இயல்பில் உள்ள ரகங்களின் எண்ணிக்கைக்கு எல்லையே கிடையாது, கௌரி! உலகத்தில் எத்தனை உள்ளங்கள் இருக்கோ அத்தனை வெவ்வேறான தன்மைகள் இருக்கும். சிருஷ்டியின் முடிவில்லாத கவர்ச்சியே அது தானே! ஒவ்வொரு மனித உயிரையும் ஒரு தனி உலகமாய்த்தான் பாவிக்க நடத்தணுமே தவிர, ஒண்ணு மாதிரிதான் இன்னொண்ணு இருந்து தீரும்னு எதிர்பார்த்தால் படைப்பு என்கிற மகா அற்புதத்தையே நாம் புரிஞ்சுக்கலேன்னுதான் ஆகும். நம்ம அறியாமையைத்தான் அது காட்டும்."

கௌரி மலைத்து உட்கார்ந்திருந்தாள். என்னெய் பள பளத்த மூக்கைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள். அமுதா அவள் நினைப்பதுபோல் சேதுவைக் கரம் பற்றாமல் போகலாம் என்ற சாத்தியக்கூறு சிறிது நேரம் ஏமாற்றமளித்தது. பிறகு அமுதாவின் வடிவம் அவள் மகள் மட்டுமாக இன்றி ஒரு தனிப்பட்ட மனிதப் படைப்பாக மாற்றம் கொண்டு அவள் உள்ளத்தின் பார்வை முழுவதையும் நிறைத்தது. அந்தக் காட்சியில் உலகம் ஒரு மகத்தான பெருக்கமாய் விரிந்து விச்வரூபம் கொண்டது. அந்தப் பெருக்கத்தைக் குறைக்கக் கூடாது — குறைக்கவே கூடாது — என்பதை அக்கணம் அவள் உணர்ந்தாள்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

மகிழ்ச்சியான சந்தர்ப்பங்களுக்கு...மொனேகோ!

# பிஸ்கட் ஒன்று-ருசித்துச் சாப்பிடும் விதம் இரண்டு

அப்படியே சாப்பிட மிகவும் அருமையானவை
மனதிற்கு உகந்த பொருள்களை
இட்டு சாப்பிடவும் மிகப்பிரமாதமானவை!

மொனேகோ—கரகரப்புமிக்க உப்பு பிஸ்கட்
எந்நேரத்திலும், எந்த சந்தர்ப்பத்திலும்
சாப்பிடக் கூடியவை. தாமதம் ஏன்.
இப்பொழுதே மொனேகோ வாங்கி,
இன்பமுடன் சாப்பிடுங்களேன்!

**பார்லே மொனேகோ**

இந்தியாவின் மிக அதிகமாக
விற்பனையாகும் உப்பு பிஸ்கட்டுகள்





everest/257b/PP tam